4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11] மதுரை 15-2-73 வியாழன் [மலர் 38

### சி.ஐ.டி.யூ. தமிழ் மாநிலக்குழு கூட்டம்

தோழர்களே,

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழுவின் கூட்டம் பிப்ரவரி 16, 17, 18 தேதிகளில் தூத்துக்குடியில் நடைபெறுகிறது. குழுவின் எல்லா உறுப்பினர்களும் தவருது கலந்து கொள்ள வேண்டுகிறோம்.

விபரங்களுக்கு

**டி. கே. சுவாமிதாஸ்,**
282, மேற்கு கிரேட் காட்டன் ரோடு,
**தூத்துக்குடி.**

என்ற விலாசத்திற்கு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

தோழமையுள்ள,
**ஏ. நல்லசிவன்,**
உதவிச் செயலாளர்

மதுரை.
7—2—73

### ஊழலுக்கு மக்கள் எதிர்ப்பு அரசே ஒப்புதல்

சென்னை, பிப். 13—

தமிழகத்தில் 1961—62, 1971—72 ஆகிய வருடங்களில் விமானம் மூலம் நிலங்களுக்கு பூச்சி மருந்து தெளிக்சப்பட்டது. இம்முறையில் பல ஊழல்கள் குறைகள் இருத்தன. ஏராளமான விவசாயிகள் புகார் செய்தனர். ஆகவே விமானம் மூலம் பூச்சி மருந்தை தெளிப்பதை இவ்வருடம் நிறுத்திவைக்க அரசு முடிவுசெய்துள்ளதாக விவசாய அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் இன்று சட்டப் பேரவையில் தெரிவித்தார்.

மாருக, பழைய கருவிகளை ரிப்பேர் செய்யவும், பதிய சருவிகள் வாங்கவும், தரையிலிருநதே மருந்து தெளிக்கவும் அரசு முடிவு செய்துள்ளதாக அவர் மேலும் கூறினர்.

# புதிய சுமைகளை எதிர்த்து போராட ஒன்றுபடுவீர்!

## அனைத்துத் தொழிற் சங்கங்களுக்கும் சி. ஐ. டி. யூ. வின் அறைகூவல்

**கோவை, பிப். 13—**

**சி. ஐ. டி. யூ. வின் தமிழ்நாடு கமிட்டி நிர்வாகிகளின் அவசரக் கூட்டம், கடந்த 7—2—73-ல் கோயமுத்தூரில் நடைபெற்றது.**

**திடீர் திடீரென விலைவாசிகள் ஏறிவிட்டதின் விளைவுகளைப் பற்றியும்-மின்சார வெட்டின் விளைவாக தொழிலாளி வர்க்கம் எவ்வளவு கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளது என்பதைப் பற்றியும்-ரூபீலென்று நூல் விலைகள் ஏறிவிட்டதால், கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் பட்டினிச்சாவுக்குப் பலியாகக்கூடிய பயங்கரத்தையும்-ரயில்வே பயணிகளின் கட்டணத்தையும், சரக்குக் கட்டணத்தையும் செங்குத்தாக ஏற்றப்போவதால் ஏற்படவிருக்கும் அவதிகளைப் பற்றியும்-வரப்போகிற பட்ஜெட்டில் போடப்போகிற மறைமுக வரிகளின் விளைவுகளைப் பற்றியும் இக்கூட்டத்தில் கவலையோடு பரிசீலிக்கப்பட்டது.**

இக்கூட்டத்திற்கு சி ஐ டி யூ வின் தமிழகத் தலைவர் தோழர் கே. ரமணி தலைமை வகித்தார். தோழர்கள் ஏ. பாலசுப்ரமண்யம், ஆர். உமாநாத், வி. கார்மேகம், ஏ. நல்லசிவன் மற்றும் பலரும் கலந்துகொண்டு விவாதம் நடத்தினர்.

**நெருக்கடி வெடிக்கும்**

இன்றைக்கு நாடு இருக்கும் நிலையில், ரயில்வே கட்டணங்களை அதிகரித்தால் என்ன ஆகும்?

சாதாரண ஏழைநடுத்தர மக்கள் வாங்கி உபயோகிக்கும் பண்டங்கள் மீது மறைமுக வரிகளை விதித்தால் என்ன ஆகும்?

இன்றே ஏறி விற்கும் விலைவாசிகள்: குறிப்பாக உணவுப் பொருள்களின் விலைவாசிகள்—காய்கறி, நல்லெண்ணெய் முதலியவற்றின் விலைவாசிகள் இன்னும் பல மடங்கு அதிகரித்து விடும். இந்த நிலையில் மின்சார வெட்டும், நூல்விலை ஏற்றமும் சேர்ந்து... அத்துடன் ரயில்வே கட்டணங்களும் கூடிவிட்டால் விலைவாசிகள் எக்கச்சக்கமாக ஏறி நெருக்கடிகள் முற்றி, கொதித்துக் கொந்தளிக்கும் நிலையை எட்டிவிடும். இதனால் லட்சோபலட்சம் தொழிலாளர்களும் நடுத்தர மக்களும், தங்களது குடும்ப பட்ஜெட்டைச் சரிக்கட்ட முடியாமல் அதோ கதிதான் அடையப் போகிருர்கள் என்ற யதார்த்த உண்மையை அரசினருக்கு சி ஐ டி யூ எடுத்துக் காட்டி எச்சரித்தது

இந்த அபாயகரமான நிலைமையில் அரசாங்கம் தனது வரிவிதிப்பு நடவடிக்கையை நிறுத்திக் கொள்ளாமல், கண்மூடிப் போக்கில்போகுமேயானல், கோபத்தீயை மூட்டி விட்ட குற்றவாளி அரசேயாகும்.

**அரசே கடை நடத்த வேண்டும்**

நிலைமையின் அபாயத்தை உணராமல், தமிழக அரசு நத்தைக்குள் சுருங்கிக் கொள்ளும் போக்கை இக்கூட்டம் வன்மையாக கண்டித்தது

மக்களின் உபயோகத்துக்கு உரிய தேவைப் பண்டங்கள் அனைத்தையும் அரசாங்கமே ஏகபோகமாகக் கொள் முதல் செய்யவேண்டும். அவற்றை கூட்டுறவு சங்கங்கள் மூலமும், அரசாங்க ஸ்தாபனங்கள் மூலமாகவும், சர்வகட்சிக் கமிட்டிகளின் மேற்பார்வையில் சமத்துவமாக வினியோகிக்கவேண்டுமென்று இக்கூட்டம்வற்புறுத்துகிறது.

**பொது வேலை நிறுத்தம் அர்த்தால் செய்வோம்**

வரப்போகிற பட்ஜெட்டில் ரயில்வே கட்டணத்தை உயர்த்திணுலும, புதிய வரிகளை விதிததாலும,

(3-ம்பக்கம் பார்க்க)

## டாலர் மதிப்பு 10 சதம் குறைப்பு

வாஷிங்டன், பிப். 14—

சர்வதேச மார்க்கெட்டில் டாலர் மதிப்பு வெகுவாக வீழ்ந்துவிட்டதால், ஜெர்மனி, ஜப்பான் போன்ற ஏனைய முதலாளித்துவ நாடுகளின் நிர்ப்பந்தத்தின் பேரில் டாலரின் மதிப்பை அமெரிக்கா 10 சதமாகக் குறைத்துக் கொண்டது. சென்ற 14 மாதங்களில் இரண்டாவது தடவையாக டாலர் மதிப்பை இவ்வாறு குறைக்கப்படுகிறது.

இதனல் அமெரிக்காவிலிருந்து வெளிநாடுகளில் இறக்குமதியாகும் பொருட்களின் விலை இனிமேல் குறையும். வெளிநாடுகளிலிருநது அமெரிக்காவில் இறக்குமதியாகும் விலைகள் உயரும்.

இந்த அறிவிப்பிற்கு ஜப்பான் தன்னுடைய நாணயமான 'என்'னை மிதக்கவிட்டுள்ளது. அதாவது டாலர்-'என்'னுக்கிடையே இப்பொழுது நிணயிக்கப்பட்டுள்ள பரிமாற்ற சத விகிதத்தை ரத்து செய்து இவை இரண்டும இயற்கையான மதிப்பின அடிப்படையில் (மார்க்கெட் போட்டியில் நிர்ணயமாவது) முடிவாகும் என்று ஜப்பானிய அரசு அறிவிக்கிறது.

## பூட்டோவுக்கு பலுச்சிஸ்தான் கவர்னர் எச்சரிக்கை

லாகூர், பிப், 13—

பலுச்சிஸ்தானத்தில் அந்த மாநில அசுக்கு எதிராக ஆயுதந்தாங்கிய கலகம் மூட்டிவிட்டுள்ள பூட்டோவின் மத்திய ஆட்சிக்கு எதிராக பலுச்சிஸ்தான் கவர்னர் பிஜென்சோ கடுமையாக எச்சரிக்கை விடுத்தார். இந்த சதி தொடருமானல், பாகிஸ்தானின் எதிர்காலத்திற்கே பெரும சோதனை ஏற்படும் என எச்சரித்துள்ளார்.

## சாலைப் போக்குவரத்து தொழிலாளர் போராட்டம்

இலட்சுமணபுரி (உ. பி) பிப் 13—

உத்திரப் பிரதேச மாநிலம் முழுவதும் நியாயச் சம்பளம் கோரி சாலைப் போக்குவரத்துத் தொழிலாளர்கள் கட்டுப்பாடாக வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். இதனை முறியடிக்கச் செய்த முயற்சிகளெல்லாம் படுதோல்வி கண்டுள்ளன.

## உகண்டா-தெற்கு வியட்நாம் புரட்சி அரசு உறவு

அம்பாலா, பிப். 13—

உகண்டா நாட்டின் அமீன் ஆட்சி தெற்கு வியத்நாம் புரட்சி அரசுடன் ராஜீய உறவு கொள்வதென முடிவு செய்துள்ளது.

## சென்னு ரெட்டியின் மிரட்டல்

ஹைதராபாத், பிப். 13—

பிரிவினை கோரும் ஆந்திரப்பிரதேசத் தலைவர்களுடன் நடக்கும் பேச்சு வார்த்தையில் மத்திய அரசு எந்த வகையிலும் ஆந்திராவைத் திருப்தி செய்யும நடவடிக்கையை எடுத்தாலும் அது தெலிங்கானுவைப் பாதிக்குமென்று தெலுங்கானு பிரிவினைக் கோஷ்டி தலைவர் சென்னுரெட்டி இந்த கூட்டத்தில் பேசுகையில் மிரட்டியுள்ளார்.

## தாய்லாந்தில் பெரும் தளமமைப்பு

### புதிய சதித்திட்டம் உருவாகிறது

பாங்காங், பிப். 13—

வியட்நாமில் பெரும் தோல்விகண்டுதன்னுடைய ராணுவ தளங்களை எல்லாம் காலி செய்யவேண்டிய நிலைமையிலுள்ள அமெரிக்கா அந்தத் தளவாடங்களை அமெரிக்காவிற்குத் திருப்பிக்கொண்டு போகவில்லை. மாருக அவைகளை தாய்லாந்தின் தலைநகரான பாங்காங்கில் இறக்கிக் கொண்டிருக்கிறது.

அதே தளவாடங்களை வைத்து பிருமாண்டமான அமெரிக்க ராணுவ தளத்தை தாயலாந்தில் கட்டி வருகிறது இதற்கு தாய்லாந்திலுள்ள அமெரிக்க கைப்பாவைகள் உடந்தையாக உள்ளனர்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும், இந்திய உபகண்டத்திலும் தன்னுடைய சதிவேலைகளைத் தொடர்ந்து நடத்த இந்தத்தளத்தை அமெரிக்கா பயன்படுத்தப் போகிறது.

## தொழிற்சங்கம் துவக்கினல் சஸ்பெண்டா?

# தொழிலாளர் போராட்டம்

சென்னை, பிப். 13—

சென்னை பல்லாவரம் பகுதியிலுள்ள பாக்வெல் கம்பெனி தொழிலாளர்கள் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக ஒன்றுபட்டுப் போராட முடிவு செய்துள்ளனர்.

பாக்வெல் கம்பெனி தொழிலாளர்களுக்கு ஆதரவாக பிப். 6-ந் தேதியன்று கம்பெனி வாயிலின் முன்பு ஒரு சர்வகட்சிப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் தோழர்கள் எஸ். கிருஷ்ணமூர்த்தி, சி பி தாமோதரன் மற்றும கணேசன் (ஏ.ஐ டி யூ சி) ஜெகவீர பாண்டியன் (இந்திரா காங்கிரஸ்) மற்றும் பலர் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை ஆதரித்துப் பேசினர்.

தோழர் சி பி. தாமோதரன் பேசுகையில், பல்லாவரம் பகுதியிலுள்ள மேல்ஸ் அண்ட் அட்லாஸ், ஸ்ரீராம் லோக், பயர்பாம் ஆகிய கம்பெனி தொழிலாளர்களுக்கு சி ஐ டி யூ தலைமையில் ஒன்றுபட்டுப் போராடி வெற்றி கண்ட விவரத்தை விரிவாக எடுத்துக் கூறினர்.

பாக்வெல் கம்பெனி தொழிலாளர்கள் கடந்த 12 ஆண்டு காலமாக தொழிற்சங்க இயக்கத்தில் பங்கெடுக்கவேயில்லை. ஆனல்தற்போது 12 ஆண்டுகளுக்குப்பின் தொழிலாளர் சங்கம் வைத்து உரிமை கோர ஆரம்பித்ததும் நிர்வாகம் மிரட்டல் வேலையில் ஈடுபட்டுள்ளது. தொழிலாளர்களை மிரட்டியும், சஸ்பெண்ட் செய்தும் கோரிக்கைகளைஏற்காமல் தட்டிக் கழித்து வந்தது.

அக் கூட்டத்தில் முதலாளியைப் பணிய வைக்க தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப் போராடுவதைத்தவிர வேறு வழியில்லை என்று தொழிலாளர்கள் ஏகமனதாக முடிவு செய்துள்ளனர்.

## சந்திரனிலுள்ள சோவியத் ஊர்தி

### இரண்டு மைல் பயணம்

மாஸ்கோ, பிப். 12—

சந்திரனில் இறக்கப்பட்டுள்ள சோவியத் விண்கல ஊர்தி (லூனகோத்-11) இதுவரை தானகவே இரண்டு மைல் தூரம் சந்திரனில் பயணம் செய்துள்ளது.

சூரிய வெளிச்சத்தையும் உஷ்ணத்தையும் கொண்டு தயாரிக்கப்படும் மின்விசையின் மூலம் லூனகோத்—தானகவே கீழேயுள்ள சோவியத் கண்ரோல் நிலைய ரேடியோ அலை உத்தவுகளின்படி இயங்குகிறது. உலகம் வியக்குங் சோஷலிஸ்ட் நாட்டின் சாதனை இது.

## ஒப்பந்தமும் உறுதி மொழியும் என்னவாயிற்று?

# பாலிடெக்னிக் மாணவர்கள் குமுறல்

### சென்னை, மதுரையில் மறியல் 55 பேர் கைது

மதுரை, பிப். 13—

மதுரையில், 'தமிழ்நாடு பாலிடெக்னிக்' மாணவர்கள் 50 பேர் இன்று, பாலிடெக்னிக், முன்பு மறியல் போராடடம் நடத்தினர்.

கோரிக்கைகளை நிறைவேற்றித்தரும்படி கோரி, கடந்தமாதம் 4-ந் தேதியன்று சென்னையில் முதலமைச்சரையும், கல்வி இலாகா செயலாளரையும் சந்தித்து வலியுறுத்தினர்.

இருவாரங்களில் கோரிக்கைகளை நிறைவேற்றித் தருவதாக முதலமைச்சர் உறுதி உறுதியளித்தார். உறுதி மொழி நிறைவேற்றப்படவில்லை.

எனவே, பிப். 1-ந் தேதியன்று மாணவர்கள் ஊர்வலமாகச் சென்று கோரிக்கை மனுவை அதிகாரிகளிடம் அளித்தனர். அதன்பின்பும் அரசுத்தரப்பிலிருந்து எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

ஒப்பந்தத்திற்கும், உறுதி மொழிக்கும் மாநில அரசும் தொழிற்கல்வி இயக்குநரும் துரோகம் செய்துவிட்டதை கண்டு பாலிடெக்னிக் மாணவர்கள் குமுறி எழுந்தனர்.

பாலிடெக்னிக் மாணவர்களின கோரிக்கைகள் சம்பந்தமாக—தான் ஏற்றுக்கொண்ட ஒப்பந்தத்திற்கு (ஒப்பந்த விவரம் 4 பக்கம் உள்ளது) அரசாங்கமும் தொழிற்கல்வி இயக்குநரும் துரோகம் செய்துவிட்டதை எதிர்த்தும், 12-ந்தேதி சென்னையில் மறியல் செய்து கைது செய்யப்பட்ட 30 பாலிடெக்னிக் மாணவர்களை விடுதலை செய்யக்கோரியும் மதுரையில் பாலிடெக்னிக் மாணவர்கள் மறியல் நடத்தினர்.

வேலூர், செட்டிநாடு, காரைக்குடி பொள்ளாச்சி, முதலிய இடங்களிலும நூற்றுக்கண காணேர்பாலிடெக்னிக் மாணவர்கள் உண்ணவிரதம் மேற்கொண்டனா. மதுரையில் 400 பேர் ஆர்ப்பாட்ட ஊர்வலமும் நடத்தினர்.

கோயமுத்தூர் பாலிடெக்னிக் மாணவர்கள் தொடர் உண்ணவிரதம் இருந்துவருகின்றனர். நேற்றும, இன்றும நூற்றுக் கணக்கான மாணவர்கள் கோரிக்கை முழக்கங்களை எழுப்பிக் கொண்டு நகரின் முக்கிய வீதிகள் வழியே ஊர்வலம் நடத்தின.

**சென்னையில் 55 பேர் கைது**

சென்னை பாலிடெக்னிக் மாணவர்கள், பாலிடெக்னிக்கின் தலைவாயிலேயே உண்ணவிரதம் பிப.5ந்தேதி முதல் தொடர்ந்துள்ளனர். கோரிக்கைகள் நிறைவேற்றப்படும்வரை உண்ணவிரதம் மேற்கொள்ளப்படுகிறது.

போராட்டத்தின் இரண்டாம் கட்டமாக, பிப். 12-ந் தேதி (திங்கள்) காலை சென்னை தொழிற்கல்வி இயக்குநர் அலுவலகம் முன்பு மறியல் செய்து 30 மாணவர்கள் கைதாயினர்.

இவர்கள் அனைவரும் அன்று மாலையில் விடுதலை செய்யப்பட்டனர்.

2-ம் நாளாக இன்று (செவ்வாய்) நடந்த மறியலில் 25 பேர் கலந்து கொண்டு கைதாயினர்.

இவர்கள்மாநிலத்தின் பல்வேறு பாலிடெக்னிக்குகளைச் சேர்ந்தவர்கள்.

முதல் நாள் மறியலில் மாணவர்களைக் கைது செய்ப போலீசார் தள்ளுமுல்லு செய்தபோது தமிழ நாடு அனைத்து பாலிடெக்னிக் மாணவர் அமைப்பின் கன்வீனர் கே. முருகேசனுக்கு சிறுகாயம் ஏற்பட்டுள்ளது.

## தடியடி நடத்துவதாக மிரட்டி பாலிடெக்னிக் மாணவர்கள் விடுதியை விட்டு வெளியேற்றம்

மதுரை, பிப், 16—

வேலைநிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும மதுரை பாலிடெக்னிக் மாணவர்களை — விடுதியிலிருந்து வெளியேற்ற போலீசார் தீவிரமாக முனைந்திருக்கிருர்கள்.

மாவட்ட கலெக்டரும் ஆர். டி. ஓ. வும் போலீஸ் அதிகாரிகளும் வந்து மாணவர்களை அழைத்து, விடுதியைவிட்டு வெளியேற வேண்டுமென்றும வெளியேரு விட்டால் லத்தி சார்ஜ் செய்து விரட்டுவோம்என்றும்மிரட்டியுள்ளதாகத் கூறப்படுகிறது.

மாணவர்களுக்கு பல்வேறு தொல்லைகள் கொடுப்பதற்கும், அவர்களை ஒன்று சேர விடாமல் தடுப்பதற்குமாகவே, பாலிடெக்னிக் கல்லூரியையும் விடுதியையும காலவரையின்றி மூடி விட்டார்கள்.

மாணவர்கள் தங்குவதற்கு இடமில்லாமலும், சாப்பாட்டுக்கு காசு இல்லாமலும், கஷ்டப்படுகிருர்கள்.

## கேரளமெங்கும் மாணவர்கள் வேலை நிறுத்தம்

திருவனந்தபுரம், பிப். 14—

கேரளம் முழுவதும் பிப். 15-ந் தேதியன்று மாணவர்கள் வேலைநிறுத்தம் செய்கிருர்கள்.

மாநிலம் முழுவதும் நடந்து வரும் போலீஸ் அடக்குமுறையை எதிர்த்தும், கேரள பல்கலைக் கழக தேர்தலில், இந்திரா காங்கிரஸ் மாணவர்கள் நடத்திய அக்கிரமங்களை எதிர்த்தும் மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்கிருர்கள்.

மாநிலம் முழுவதும் நடைபெறும் மாணவர்களின் வேலைநிறுத்தத்துக்கு, இந்திய மாணவர் சங்கமும் கே. எஸ் ஸி மாணவர் சங்கமும் அறைகூவல் விடுத்துள்ளது.

15-ம் தேதி வேலைநிறுத்தம் செய்யும் மாணவர்கள் அன்று அடிப்படை உரிமைப் பாதுகாப்புக் குழு சார்பில் மாநிலம் முழுவதும போலீஸ் நிலையங்களுக்கு முன் நடைபெறும் உண்ணவிரதத்தில் கலந்துகொள கிருர்கள்.

எதிர்க் கட்சிகளின் மாணவர் சங்க ஊழியர்களுக்கு எதிராக கட்டவிழ்ந்து விடப்பட்டுள்ள போலீஸ் அடக்குமுறைகள் தொடர்ந்து நீடிப்பதற்கு இந்திய மாணவ சங்கச் செயலாளர் தோழர் ஜி சுதாகரனும், கே எஸ். ஸி மாணவர் சங்கச் செயலாளர் டி எம். ஜேக்கப்பும் கடுமையாகக் கண்டனம் தெரிவித்து, எச்சரிக்கை விடுத்துள்ளனர்.

## தமிழக சட்டசபை ஒத்திவைப்பு

சென்னை, பிப். 13—

கடந்த பிப் 2-ம் தேதியிலிருந்து நடைபெற்ற தமிழக சட்டப்பேரவையின் கூட்டத் தொடர் இன்று முடிவுற்றது. மீண்டும பிப். 26-ம் தேதி சட்டப் பேரவை கூடும் என அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஹண்டே வெளியேற்றப் பட்டார்

சென்னை, பிப். 13—

சட்டப் பேரவையில் ஒப்பந்த பஸ்கள், பயணிகள் பஸ்களை கையகப்படுததும் மசோதா மீது விவாதம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது, சுதந்திரா கட்சித்தலைவர் ஒரு ஒழுங்குப் பிரச்னையை கிளப்பினர். உதவி சபாநாயகர் உட்காரும்படி கூறியும் உட்காராததால் உதவி சபாநாயகர் திரு ஹண்டேயை சபையிலிருந்து வெளியேறும்படி உத்திரவிட்டார். திரு ஹண்டே வெளியேறியதைத் தொடர்ந்து சிண்டிகேட்டை சேர்ந்த பொன்னப்பநாடாரும அவரது கட்சியினரும் வெளிநடப்பு செய்தனர்.

# தீக்கதிர்

## திண்டுக்கல் தேர்தல் நேர்மையாக நடந்திட

திண்டுக்கல் நாடாளு மன்ற உப தேர்தலுக்காக வாக்காளர் பட்டியல் தயாரிக்கும் வேலையில் படுமோசமான ஊழல்கள் நடப்பதாக எதிர்க் கட்சிகள் குற்றம் சாட்டுகின்றன.

இல்லாத வாக்காளர்களைச் சேர்ப்பது, இருக்கிற வாக்காளர்களை நீக்குவது, தங்களுக்கு வாக்களிக்க மாட்டார்கள் என்று நம்பப்படுகின்ற பல வாக்காளர் பெயர்களை (பின்னால் தேர்தலின் போது அவர்களை வாக்களிக்க தகுதியற்றவர்களாக்கும் நோக்கத்துடன்) திருத்துதல் போன்ற பலரகமான "குல்மால்" வேலைகளில் ஈடுபடுவதாக குற்றச்சாட்டுகள் எழுந்துள்ளன.

இந்தக் குற்றச்சாட்டுகள் அனைத்தையும் முதலமைச்சர் கருணாநிதி நிராகரித்துள்ளார். நிராகரித்து அவர் தரும சமாதானம் என்ன?

1971-ல் இருந்த மொத்த வாக்காளர் எண்ணிக்கையைவிட இன்று நடைபெறும் புதிய தீவிர வாக்காளர் பதிவின் மூலம் 16 ஆயிரம் வாக்காளர்களே அதிகம் சேர்க்கப்பட்டுள்ளனர். இந்த எண்ணிக்கை அதீதமான எண்ணிக்கையல்ல, சாதாரணமாக ஒரு நாடாளுமன்றத் தொகுதியில் ஓராண்டில் ஏற்படக்கூடிய உயர்வுதான்; இதில் மோசடி எதுவுமில்லை என்கிறார்.

இது முறையான, நேர்மையான பதில் அல்ல எண்ணிக்கை குறைவைக் காட்டி, அங்கு நடைபெறும் ஊழலை மறைத்துவிட முடியாது.

குறைவான எண்ணிக்கை என்று திரு. கருணாநிதி கூறியிருப்பதே உண்மை என்று கொண்டால்கூட, எதிர்க்கட்சிகளுக்கு வாக்களிக்கக்கூடிய முப்பதாயிரம் வாக்காளர்களைப் பட்டியலிலிருந்து நீக்கிவிட்டு, 46 ஆயிரம் புதிய தி மு கவுக்கு நிச்சயம் வாக்களிக்கக்கூடிய பெயர்களை (உண்மையான பெயர்களோ அல்லது மோசடிப் பெயர்களோ, அது அவர்களுக்குத்தான் வெளிச்சம்) சேர்ந்திருந்தாலும் கூட திரு. கருணாநிதி கூறிடும் அதேசிறிய எண்ணிக்கைதான் வரும்.

ஆகவே மோசடியைப் "பக்குவமாக"ப் புரிந்துள்ளதை மூடி மறைக்கும் பதில் அவரது பதில் என்று எதிர்க்கட்சிகள் சந்தேகம் கொண்டால் அதில் தவறுஏதுமில்லை

இந்நிலையில் தேர்தல் ஒழுங்காக நடைபெறுமா என்ற சந்தேகம் எதிர்க்கட்சிகள் வட்டாரத்தில் மேலோங்கி வருகிறது. இந்த சந்தேகத்தைநேர்மையானவழிமுறையை பின்பற்றுவதன் மூலம் போக்கிட தி. மு. க. ஆட்சியாளர் முன்வரவில்லை. மாறாக, "உங்களுக்கு தோல்வி ஜுரம் கண்டுவிட்டது. அதனால்தான் வாக்காளர் பட்டியல் மோசடி பற்றிப் பேசுகிறீர்கள்" என்ற பதிலே தி. மு க. தரப்பிலிருந்து வருகிறது.

உண்மை நிலவரம் என்ன? சென்ற 71 தேர்தலில் வெற்றிபெற்ற தி. மு. க. வின் வாக்குகள்தாம் (இரண்டு லட்சத்து பதினையாயிரம்) இன்று பிளவுபட்டிருக்கின்றன. அ. தி மு. க; தி.மு.க. என்று இருகூறாக அந்த வாக்குகள் பிளவுபட்டுள்ளன. உண்மையில் அ. தி. மு. க. வின் பக்கமே அதிகமாக முன்னாள் தி மு. க. வாக்குகள் வந்துள்ளன என்பதே பலரது கணிப்பு அதுமட்டுமல்ல தி. மு. க. வை ஆதரித்த இந்திரா காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் வாக்குகள் இப்பொழுது தி. மு. க. வுக்கு இல்லை. வலதுக்கு அந்தத்தொகுதியில்செல்வாக்கு இல்லை என்றாலும் இந்திரா காங்கிரஸ் திரட்டக்கூடிய காங்கிரஸ் வாக்குகள் தி. மு. க. வுக்கு நிச்சயம் இந்தத் தேர்தலில் கிடைக்காது. இந்தத்தொகுதியில் கணிசமான செல்வாக்குகளைப் பெற்றுள்ள மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இரு காங்கிரஸ் கட்சிகளையும், தி மு கவையும் எதிர்த்துப்போராடும் அரசியல் நிலை எடுத்துள்ளது அனைவரும் அறிந்ததே.

அதே சமயத்தில் சிண்டிகேட் காங்கிரசின் 71 நிலையில் அதிகம் மாறுதல் இல்லை. அன்று வாங்கிய ஒரு லட்சத்து 50 ஆயிரத்தில்பிளவு இல்லை. இன்று தி மு க பிளவுபட்டுள்ள நிலையில் தி மு க வுக்கு அது ஒரு சவாலாகவே உள்ளது.

இந்த நிலைமையில் எதிர்க்கட்சிகளுக்குத் தேர்தல் தோல்வி ஏற்பட்டுவிட்டது என்று தி மு க வினர் கூறுவது தங்களுடைய தேர்தல் தோல்வி பீதியை மூடி மறைக்கச் செய்யும் பித்தலாட்டப் பிரச்சாரமாகும்.

பயங்கரமான தோல்வியை தி மு க எதிர்நோக்க வேண்டிய நிலையில் வைக்கப்பட்டுள்ள காரணத்தால்தான் "எப்படியாவது, எதைச்செய்தாவது" வெற்றிபெற முன் வந்திருக்கிறது. இன்றைய அதன் நிலைஇது.

"இல்லை: நாங்கள் நேர்மையாக ஜனநாயக மரபுகளை மீறாமல் தேர்தல் நடத்தி முடிக்க விரும்புகிறோம்" என்று தி மு க ஆட்சியாளர் கூறுவார்களாயின், நாம் ஒரு ஆலோசனை கூறுகிறோம். திண்டுக்கல் நாடாளுமன்ற தொகுதி முழுவதிலுமுள்ள வாக்காளர் பட்டியலை சர்வ கட்சியினரையும் கொண்ட ஒரு வாக்காளர் பரிசீலனைக் குழு ஒன்றை நியமித்து, அது தொகுதி முழுவதும் சென்று பரிசீலனை செய்து சரி பார்ப்பதை ஏற்க தி மு க ஆட்சி தயாரா? இந்தச்சர்வ கட்சிக்குழு பரிசீலனையை முடித்த பிறகு, அதன் மேற்பார்வையில் தேர்தல் நடத்த தி. மு க. ஆட்சி முன்வருமா?

தி மு க ஆட்சியின் தரப்பில் மோசடி முயற்சி இல்லை என்றால், இந்த ஆலோசனையை ஏற்கத்தயாரா?

# வேலையில்லாதோரின் கோரிக்கைகளுக்காக தொழிற்சங்கங்கள் போராட வேண்டும்

## "பீப்பிள்ஸ் டெமாக்ரஸியின்" அவசர வேண்டுகோள்

பல நாடுகளில் பாசிஸமானது அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான காரணங்களில், ஒரு முக்கியமான காரணம் என்னவென்றால், வேலையில்லாதவர்கள் மத்தியில் ஏற்பட்டிருந்த சோர்வுதான்.

### தொழிற் சங்கங்களின் உடனடிக் கடமை

ஸ்தாபன ரீதியில் திரண்டிருக்கும் தொழிற்சங்க இயக்கம் அவசரமாக இந்தப் பிரச்னையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

அதாவது, வேலையில் இருக்கும் தொழிலாளர்களின் கோரிக்கைகளுக்காக மட்டும் கிளர்ச்சிநடத்துவதுடன் நின்றுவிடாமல்—வேலையில்லாதவர்களின் கோரிக்கைகளுக்காகவும் பெரும்கிளர்ச்சியில் ஈடுபடவேண்டும்.

வேலையில்லாதவர்களுக்கு 'வேலை கொடு! வேலை கொடுக்கும்வரை, உதவித் தொகை கொடு!' — என்ற கோரிக்கையை முனைப்புடன் முன் கொண்டுவர வேண்டும்.

### காங்கிரஸ் கொள்கையால் வந்த வினை

வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுக்க மறுப்பது காங்கிரஸ் கொள்கைதான் என்பதையும் — அதே காங்கிரஸ்தான் வேலையில்லாதவர்களை தவறான வழியில் தள்ளிவிடுகிறது என்பதையும் அவர்களிடம் விளக்கிக் கூற வேண்டும்.

விளக்கம் அளித்து, உண்மை நிலைமையை உணரச் செய்து, காங்கிரஸ் ஆட்சிக்கு எதிரான போராட்டத்தில் அவர்களையும் அணிவகுக்கச் செய்திடல் வேண்டும்.

### எழுமின்! விழிமின்!

இந்தக் கடமையை தொழிற்சங்க இயக்கம் மறந்து விடுமேயானால்......அல்லது அவசிய அவசர நிலைமைக்கு தக்கவாறு இதுவிஷயத்தில் துரிதமாக நடவடிக்கை எடுக்கத் தவறுமேயானால்...வேலையில்லாதவர்களை கைப்பாவைகளாக்கி, வேலை செய்கிறவர்களுக்கு எதிராகவும் இதர முற்போக்கு சக்திகளுக்கு எதிராகவும் பிற்போக்காளர்கள் ஏவிவிடுவார்கள். இது பெரும் ஆபத்து. இதை சகல தொழிற்சங்கங்களும் உணரவேண்டும்.

"மண்ணின் மக்களுக்கே வேலை' (ன்சல் ஆப்சாயில் — என்ற ஆபத்தான முழக்கத்தை காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கிளப்பி விட்டிருப்பதின் ஆபத்தை உணர்த்தி, 4—2—73-ந்தேதிய 'பீப்பிள்ஸ் டெமாக்ரசி' பின்வரும் எச்சரிக்கை விடுத்துள்ளது

இந்த ஆபத்தான முழக்கத்தின்மூலம் நாட்டிலுள்ள பல்வேறு இனங்களிலுமுள்ள வேலையில்லாதவர்களை உசுப்பிவிட்டு, ஒரு இனத்தவர் மீது மற்ற இனத்தவரை ஏவிவிட்டு, அடித்துக்கொண்டு சாகுபடி செய்கிறார்கள்.

இப்பொழுது புதிதாக இன்னொரு தந்திரத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். அதாவது வேலையில் அமர்ந்திருக்கிறவர்கள் மீது, வேலையில்லாதவர்களை ஏவி மோதிக் கொள்ளும்படி செய்கிறார்கள்.

### ஆபத்தை உணருக

ஆளும் கட்சியின் இந்தத் தந்திரவித்தைகளைப் பற்றி லட்சோப லட்சக்கணக்கான வேலையில்லாதார், திக்கு திசை தெரியாமல் தெருக்களிலே திரிந்து கொண்டிருக்கிறார்கள். இவர்கள் எந்தவொரு இயக்கத்திலும் ஈர்க்கப்படவில்லை, அவர்களது பிரச்னைக்காக எந்தவொரு இயக்கமும் நடத்தப்படவில்லை

வேலைக்காக அலைந்து திரிந்து சோர்ந்து போய்விட்டார்கள். வாழ்க்கையே அவர்களுக்குக் கசந்துபோய் விட்டது.

### மோத விடுகிறார்கள்

வெறிச்சோடிக்கிடக்கும் அவர்களை, வேலையில் அமர்ந்துள்ள தொழிலாளர்களுக்கு எதிராகத் திருப்பி விடுவதில் ஆளும் கட்சி முனைந்திருக்கிறது, அது மட்டுமல்ல, தொழிலாளர்களும், இதர ஊழியர்களும் தங்களது வாழ்க்கை நிலைமைகளைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காகப் போராடுகின்றபோது, அந்தப் போராட்டங்களை உடைக்க, இந்த வேலையில்லாதவர்களை உசுப்பி விடுகிறார்கள்.

### மேற்கு வங்கத்தில் நடப்பது என்ன ?

ஏற்கனவே, மேற்கு வங்கத்தில், வேலையில்லாத ஒரு பகுதி வாலிபர்களைப் பிடித்து—காங்கிரஸ் போக்கிரிகளை ஆதரிக்கும்படியாக தப்பு வழியில் திருப்பிவிட்டு—தொழிற்சங்க அலுவலகங்களைக் கைப்பற்றிக் கொள்ளச் செய்தார்கள் தொழிலாளர்கள் முக்கிய ஊழியர்களையும் தலைவர்களையும் படுகொலை செய்தார்கள், தொழிலாளர்களைத் தாக்கிப் பயமுறுத்தினார்கள்.

ஆந்திரகாங்கிரஸ் கிளர்ச்சி

## திருச்சி டிவிஷனில் 16 இரயில்கள் ஓடவில்லை

திருச்சி, பிப். 11—

நிலக்கரி தட்டுப்பாடு காரணத்தினால், தென் பிராந்திய இரயில்வேயின் திருச்சி டிவிசனில் (பிரிவில்) 16 இரயில்கள் ரத்துச் செய்யப்பட்டன. நேற்றிலிருந்தே இந்த இரயில்கள் நிறுத்தப்பட்டன.

ஆந்திரப் பிரதேசத்தில், இந்திரா காங்கிரஸ் கட்சியினர் நடத்திவரும் 'தனி நாடு' கிளர்ச்சியினால் வட மாநிலங்களிலிருந்து, இரயில் மூலம் வர வேண்டிய நிலக்கரி வந்துசேரவில்லை.

கரி ஏற்றப்பட்ட இரயில்கள் அப்படியே அங்கேயே நிற்கின்றன.

நெய்வேலியில் வெட்ட வேண்டிய 2-வது சுரங்கம் குறித்து மத்திய-மாநில அரசுகள் எவ்விதஅக்கறையும் காட்டாததே நிலக்கரித தட்டுப்பாட்டிற்கு முக்கிய காரணமாகும்.

# விவசாயத் தொழிலாளர் சங்க தலைவர் வீட்டுக்கு தீ

## மற்றொரு வெண்மணியை உருவாக்க சதி

கோவை, பிப். 10—

பேரூர் பஞ்சாயத்திற்கும், குனியமுத்தூர் பஞ்சாயத்திற்கும் உட்பட்ட புட்டுவிக்கி, வையாபுரி புதூர் பகுதிகளில் உள்ள விவசாயத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தங்களில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டு செயலாற்றியவர்களான விவசாய சங்க செயலாளர் தோழர் பரமசிவம், கமிட்டி உறுப்பினர் தோழர் அய்யாச்சாமி ஆகியோர் ரௌடிகளால் கடுமையாகத் தாக்கப்பட்டுள்ளனர். மேலும் புட்டுவிக்கி, வையாபுரி புதூரிலுள்ள விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் தலைவர் தோழர் நாச்சியின் குடிசைக்கும் பக்கத்திலுள்ள குடிசைக்கும் ரௌடிகள் தீவைத்துக் கொளுத்தினர்.

இந்தச் செயல்கள் நிலச்சுவான்தார்களின் தூண்டுதலாலேயேதான் நடந்திருக்க வேண்டும் என்று மக்கள் சந்தேகப்படுகின்றனர். அப்பகுதியிலுள்ள மக்கள் மேலும் ஒரு வெண்மணியை நிலச்சுவான்தார்கள் உருவாக்கி விடுவார்களோ என பதட்டத்துடனும், பயமுடனும் காணப்படுகின்றனர்.

இது குறித்து மாவட்ட ஆட்சித்தலைவருக்கு விவசாயத் தொழிலாளர் சங்கம் ஒரு மகஜர் அளித்துள்ளது.

### தற்செயலானது அல்ல

இப்பகுதியிலுள்ள சுமார் 1000 விவசாய தொழிலாளர் 7—1—73 முதல் 14—1—73 வரை கூலி உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்தனர். இதில் உடன்பாடு ஏற்பட்டு 16-1-73ம் தேதி முதல் வேலை நிறுத்தம் கைவிடப்பட்டு, நல்ல சூழ்நிலை உருவானது.

ஆனால் பிப். 4-ந்தேதி இரவு சினிமா பார்த்து விட்டு வந்த விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் முக்கியஸ்தர்களான தோழர்கள் பரமசிவத்தையும், அய்யாசாமியையும் செல்வபுரத்தைச் சேர்ந்த துரைமுருகன் கருப்புச்சாமி ஆகியவர்களுடன் சுமார் 15 பேர் சேர்ந்து ஆயுதங்களைக் கொண்டு தாக்கினராம்.

இது தற்செயலான நிகழ்ச்சி அல்ல. நிலச்சொந்தக்காரர்களின் தூண்டுதலின் பேரில்தான் நடந்துள்ளது என அப்பகுதி மக்கள் பேசிக் கொள்கின்றனர்.

### குடிசைகளுக்குத் தீ

6—2—73இரவு $2\frac{1}{2}$ மணிக்கு சங்கத்தலைவர் நாச்சி குடிசைக்கும், அருகிலுள்ள குடிசைக்கும் சிலர் தீ வைத்து கொளுத்தியுள்ளனர். இந்தக் குடிசைகள் நிலச் சொந்தக்காரர் வேலப்பக்கவுண்டரின் தோட்டத்திற்குப் பக்கமே யுள்ளது.

### கலெக்டரிடம் முறையீடு

எரிக்கப்பட்ட விவசாயத் தொழிலாளர்களின் உடைமைகள் முழுதும் எரிந்து நாசமாகியுள்ளது இப்படிப்பட்ட தாக்குதல்கள் பெருகி பெரிய நிகழ்ச்சிகளாக உருவாகிவிடாமல் தடுக்க கலெக்டர் உடனடியாக நடவடிக்கையெடுத்து இத்தாக்குதல்களையும், தீ வைப்பையும், நடத்தியுள்ளவர்களையும், அவர்களைத் தூண்டிவிட்டு இக்கொடுமைகளை செய்ய ஊக்குவிப்பவர்களையும் கண்டுபிடித்து தக்க தண்டனை கிடைக்க நடவடிக்கைகள் எடுக்குமாறும், பாதிக்கப்பட்டு வீடிழந்து நிற்கக் கூடியவர்களுக்கு நஷ்டஈடு வழங்கி உதவவேண்டியும் கலெக்டருக்கு தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர் சங்கம் புட்டுவிக்கி வையாபுரி புதூர் கமிட்டி ஒரு மகஜர் அளித்துள்ளது.

## தியாகம் செய்ய வேண்டுமாம்

சென்னை, பிப். 12—

தமிழகத்தில் ஏற்கனவே, மின்வெட்டினால் தொழிற்சாலைகளும், மக்களும் சொல்ல முடியாத துயரத்தில் மூழ்கியுள்ளனர். இச்சமயத்தில், முதலமைச்சர் கருணாநிதி மேலும் மின்வெட்டு வரும் எனவும்; இதனை தவிர்க்க முடியாது என்றும் இன்று சட்டப் பேரவையில் அறிவித்துள்ளார்.

மின்வெட்டினை சமாளிக்க பொதுமக்கள் தியாகம் செய்ய வேண்டுமாம். என்ன தியாகம் என தெரியவில்லை!... தொழிற்சாலைகள் மூடப்படுவதால் வேலை இல்லாமல் பட்டினி கிடந்து சாகச் சொல்கிறாரா?

## ஆசிரியருக்கு...

# அறுவைக்கு ஆள் பிடித்துவர பெண் ஊழியர்களை பயன்படுத்தாதீர்

ஐயா,

தற்சமயம் குடும்பக் கட்டுப்பாடு திட்ட அதிகாரிகள் அறுவைச் சிகிச்சை செய்து கொள்ளும் ஒவ்வொரு நபருக்கும் ரூ. 100-ம் ஒரு வேஷ்டி அல்லது சேலையும் கொடுத்து அதிக ஆட்களைப் பிடிக்க தீவிர முயற்சி செய்து வருகிறார்கள்.

இதற்காக, அரசாங்க அலுவலகத்தில் பணிபுரியும் ஊழியர்களையும் பெண் ஊழியர்களையும் —ஆசிரியர் ஆசிரியைகளையும், வலுக்கட்டாயமாக ஈடுபடுத்துகிறார்கள். ஒரு நபர் 10 ஆட்களைப் பிடித்து வரவேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறார்கள்.

ஆண் ஊழியர்களின்பாடு ஒருபுறம் இருக்க, ஆட்களைப் பிடித்துவ நவதற்காக பெண் ஊழியர்கள்நாயாக அலைந்து கண்ணீர் வடிப்பதைச் சகிக்கவே முடியவில்லை.

பெண்கள் எப்படி அய்யா தனியாக ஆண்களிடம்பேசி அழைத்து வர முடியும்?

இந்தவிவகாரத்தை பெண்கள் தலையில் சுமத்துவதை வன்மையாகக் கண்டிக்கிறோம். இதை உடனே தடுத்து நிறுத்த வேண்டுமென்று அரசினரை வற்புறுத்துகிறோம்.

இப்படிக்கு,
எஸ். ஏ. பீ. பாப்பா
உதவிச் செயலாளர்
ஜனநாயக மாதர் சங்கம்
மதுரை-20.

கூலியை குறைக்க

# அளக்கும் படிகளில் தில்லு முல்லு

## வி. தொழிலாளர் வேலைநிறுத்தம்

பழனி, பிப் 12—

பழனி தாலுகா விவசாயத் தொழிலாளர்களும், கொத்துக்காரர்களும் கூலிஉயர்வு கோரியும், கூலியைமுத்திரை வுள்ளத்தில் அளந்து தரவேண்டுமென்றுவலியுறுத்தியும் தங்களது ஒன்றுபட்ட போராட்டத்தை துவக்கியுள்ளனர்.

கடந்த ஒருவார காலமாக கோரிக்கைகளை வலியுறுத்தி அறுவடை வேலைக்கு இப்பகுதியிலுள்ள விவசாயத் தொழிலாளர்கள செல்லவில்லை இதனால் அறுவடை வேலைகள் ஸ்தம்பித்து நிற்கின்றன.

விவசாயத் தொழிலாளர்கள், கொத்துக்காரர்களின் கூட்டம் பிப்ரவரி 2ம்தேதியன்று பழனி தாலுகா பாப்பம்பட்டியில்நடைபெற்றது. கூட்டத்தில் பாப்பம்பட்டி, ஆண்டிபட்டி, அய்யம்பாளையம், சி க. புதூர், குப்பம்பாளையம், லட்சுமிபுரம், சித்திரேவு, வே. புதூர் ஆகிய ஊர்களைச் சேர்ந்த விவசாயத் தொழிலாளர்களும், கொத்துக்காரர்களும் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர். மற்றும் வாடிப்பட்டி, கரடிபட்டி, காவளப்பட்டி, கொடுமம், ருத்ரபாளையம், கொமாரலிங்கம் ஆகிய ஊர்களைச் சேர்ந்த விவசாயத் தொழிலாளர்களும் கொத்துக்காரர்களுக்கு தங்களது போதரவைத் தெரிவித்துள்ளனர்.

### கோரிக்கைகள்

இக் கூட்டத்தில் கலந்து கொண்ட விவசாயத் தொழிலாளர்கள் 5 லிட்டர் கொண்டமுத்திரை வள்ளத்தில் தான கூலி அளிக்க வேண்டும் என்று கோரி போராட முடிய செய்துள்ளனர்.

இதற்கு முன்னர் மிராசுதார்கள் விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி அளக்கும்போது மூன்றரை லிட்டர் கொண்ட வள்ளத்தில் தான் அளந்து கொடுக்கின்றனர். ஆனால் மிராசுதார்கள் குத்தகைதாரர்களிடமிருந்து நெல்லை அளந்து வாங்கும்போது மட்டும் 7 லிட்டர் கொண்ட பெரிய வள்ளத்தைப் பயன்படுத்துகிறார்கள் இந்த அநியாயத்தை முறியடிக்க விவசாயத் தொழிலாளர்களும், கொத்துக்காரர்களும்முடிவு செய்துள்ளனர்.

### 5 லிட்டர் வள்ளத்தால் அளந்திடுக

மேலும் ஆண் தொழிலாளர்களுக்கு நாள் ஒன்றுக்கு ரூ. 4-40ம், பெண் தொழிலாளர்களுக்கு ரூ 3-00ம் கரும்பு தோட்டத் தொழிலாளர்களுக்கு ரூ 5-ம் கூலி கொடுக்கவேண்டும்.

ஒரு கொத்துக்காரர்நடவு செய்த நிலத்தை அதே கொத்துக்காரர்தான் அறுவடை செய்ய வேண்டும். மேலும் மிராசுதார்கள், குத்தகைதாரர்களிடம் நெல் அளக்கும்போதும், வியாபாரிகள் நெல அளக்கும் போதும் 5 லிட்டர்கொண்ட வள்ளத்தைத்தான் பயன்படுத்தவேண்டும்.

தற்போது பாப்பம்பட்டியை அடுத்துள்ள உடுமலை தாலுகாவில் 5 லிட்டர் கொண்ட முத்திரை வள்ளத்தில்தான் கூலி அளக்கபபடுகிறது என்பதையும் சுட்டிக்காட்டி தங்களின் கோரிக்கையின் நியாயத்தை வலியுறுத்தினர்.

### கிராம மேளத்துடன் ஊர்வலம்

மேற்கண்ட இந்த கோரிக்கைகளை வலியுறுத்தி பிப்ரவரி 8ம் தேதியன்று பாப்பம்பட்டியில் கிராம மேள வாத்தியங்களுடன் சிறப்பான ஊர்வலம் நடைபெற்றது. ஊர்வலத்தில் ஏராளமான விவசாயத் தொழிலாளர்களும், கொத்துக்காரர்களும் கலந்து கொண்டனர் ஊர்வலந்தின் இறுதியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் வவெ காளியப்பன், முருகன் முத்து செட்டியார், ருத்ராபாளையம் ஷெரீப், மற்றும் தோழர் கவுண்டன், ஏ சிலுவை முத்து, ஏ. எஸ். காளிமுத்து, வி. ஏ. கருப்பசாமி ஆகியோர் விவசாயத் தொழிலாளர் கோரிக்கைகளின் நியாயத்தை வலியுறுத்திப் பேசினர்.

விவசாயத் தொழிலாளர்களின் இக்கூட்டத்தில் கலந்துகொள்ள தி மு க, அ தி மு க, சிண்டிகேட், காங்கிரஸ் கட்சிகளுக்கு அழைப்பு விடுத்தும், இக்கூட்டத்தில் ஒருவரும் கலந்துகொள்ளவில்லை. இதுமட்டுமல்லாது இந்திரா காங்கிரசின் தாலுகா கமிட்டி செயலாளர் திரு. சே. முத்து என்பவர் பெரிய நிலச்சுவான்தார்களுக்கு ஆதரவாக வரிஞ்சி கட்டிக்கொண்டு செயல்பட்டு வருகிறார். மேலும் பெரிய நிலச்சுவான்தார் வீட்டில் நடைபெற்ற மிராசுதார்களின் கூட்டத்தை ஆதரித்து சிண்டிகேட் காங்கிரசாரும், தி. மு க வினரும் பக்கமேளம் வாசிக்கின்றனர்.

இதைக்கண்டு இப்பகுதியிலுள்ள விவசாயத் தொழிலாளர்களும் இத்தகைய விவசாயிகளும் இக்கட்சிகளின் போலி வேடத்தை புரிந்துகொண்டனர்.

### போராட்டம்

கூலி உயர்வு, முத்திரை வள்ளத்தில் கூலி தரவேண்டும் ஆகிய கோரிக்கைகளை வலியுறுத்தி இப்பகுதியிலுள்ள விவசாயத் தொழிலாளர்களும், சொத்துக்காரர்களும் கடந்த ஒருவாரமாக ஒன்றுபட்டுஅறுவடை வேலைக்குச் செல்லவில்லை. இதனால் இப்பகுதியில் அறுவடை வேலைகள் ஸ்தம்பிக்கப்பட்டுள்ளது.

## நூலுக்கு அடையாள கார்டு வழங்குக

மதுரை, பிப். 11—

மதுரை ஜில்லா ஐக்கிய கைநெசவுத் தொழிலாளர் சங்கத் தலைவர் கே. அங்கமுத்து, உதவிச் செயலாளர் எம். குமாரசாமி, எம். கணபதி ஆகியோர் கடந்த 9-ந்தேதி மாவட்ட ஆட்சித் தலைவரையும், ஜவுளி நூல் உற்பத்தி உதவி இயக்குனரையும் சந்தித்து நெசவாளர்களின் கோரிக்கைகள அடங்கிய மகஜரை அளித்தனர்.

நூல் விலை உயர்ந்து கொண்டு செல்வதை எடுத்துரைத்தனர். நெசவாளர்களுக்கு அடையாள கார்டு மூலம் குறைந்த விலைக்கு நூல் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று வலியுறுத்தினர்.

தனிப்பட்ட உரிமையாளருக்கு மட்டும் கார்டு மூலம் நூல் வினியோகித்தாலும், தனிப்பட்ட தொழிலாளருக்கு மட்டும் நூல் வினியோகித்தாலும் அதனால் சிக்கல் ஏற்படும் என்பதையும், கடந்த காலத்தில் நூல்வினியோகம் செய்யப்பட்டதில் ஏற்பட்ட பல படிப்பினைகளையும் எடுத்துக் கூறினார்கள்.

நெசவாளர் பிரதிநிதிகள் எடுத்துக் கூறிய இவ்விஷயங்கள் குறித்து பரிசீலிப்பதாகவும், கோரிக்கை மனுவை அரசாங்கத்துக்கு அனுப்பி வைப்பதாகவும கலெக்டரும், உதவி இயக்குனரும வாக்களித்தனர்,

## கோவில் சொத்துக்களை நாட்டுடைமையாக்க எதிர்ப்பு

சென்னை, பிப். 12—

கோவில்கள், மசூதிகளின் சொத்துக்களை நாட்டுடைமையாக்குவதற்கு முஸ்லீம்லீக் எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

கோவில் சொத்துக்களை நாட்டுடைமையாக்குவது பற்றிய விவாதம் இன்று சட்ட மன்றத்தில் எழுந்தது. இதையொட்டி கோவில், மசூதிகளின் சொத்துக்களை நாட்டுடைமையாக்கக் கூடாது என்று முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் திருவகாப்பும், அப்துல் ஜப்பாரும் கடும் எதிர்ப்புத் தெரிவித்துப் பேசினர்.

# புதிய சுமைகளை....

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

அதற்கு எதிராக, ஒரு ஒன்றுபட்ட எதிர்ப்பை உருவாக்குவதென்று இக்கமிட்டி தீர்மானித்தது. அந்த நேரடி நடவடிக்கையானது, தமிழ்நாடு முழுவதும் பொதுவேலை நிறுத்தமாகவும், பூரண அர்த்தாலாகவும் இருக்கும்.

### அனைத்துசங்கங்களும் ஜனநாயக கட்சிகளும்

மத்திய அரசாங்கமானது புதிய வரிகளை விதிக்க முற்படுகிறபோது — ரயில்வே கட்டணத்தையும் உயர்த்த முனைகின்றபோது—அக்கணமே ஒன்றுபட்ட நடவடிக்கையில் இறங்கத் தயாராக இருக்கும்படி, அனைத்து தொழிற்சங்கங்களையும், அனைத்து ஜனநாயகக்கட்சிகளையும் சி ஐ டி யூ. வேண்டிக்கொள்ளுகிறது.

### மின்சார வெட்டும் தி மு க அரசும்

கடுமையான மின்சார நெருக்கடியும் — அதைத் தொடர்ந்து மின்சார வெட்டும் ஏற்பட்டிருப்பதின் கொடிய விளைவுகளைப்பற்றியும் கமிட்டி கவலையோடு பரிசீலித்தது.

மின்சார வெட்டால், உற்பத்தி பெரிய அளவில் வீழ்ச்சி அடைந்துவிட்டது. பல்லாயிரக்கணக்கான சிறு தொழில்கள் முடங்கிவிட்டன. லட்சோப லட்சம் தொழிலாளர்கள் லே—ஆப் விடப்பட்டு அரைச்சம்பளத்திலும், அதுகூட இல்லாமலும் பட்டினி கிடக்கிறார்கள்.

கடந்த 6 ஆண்டுகளாக ஆட்சி பீடத்தில் இருந்த தி மு க. அரசானது, மின் துறையில் செய்து முடிக்க வேண்டியசாதனைகளையெல்லாம் செய்து முடித்துவிட்டதாக, தானும் நம்பிற்று, நாட்டு மக்களையும் நம்ப வைத்தது. காங்கிரஸ் ஆட்சியில் ஏற்பட்டது போன்று, இனிமேல் மின்சாரவெட்டு இருக்கவே இருக்காது என்றும் பெருமையடித்தனர்.

இப்படியாக, பாதகத்தனமாக அலட்சியமாக நடந்து கொண்டதின் விளைவு என்ன?

எதிர்பாராத நிலைமையில் மின்வெட்டு ஏற்பட நேரிட்டால், அதுபோன்ற சமயங்களில், சமாளிப்பதற்கு விசேஷ ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமே என்ற புத்தியே இல்லாமல், ஆறு வருட ஆட்சியை நடத்தினார்கள்.

இந்த அவல நிலைக்கு தி மு க. அரசினர் கூறும் சால்ஜாப்புகள் என்ன? தாங்கள் முன்பு சொல்லி வந்ததெல்லாம் பொய்புரட்டுகள் என்று ஒப்புக்கொள்ளுவதற்குப்பதிலாக— தொலைநோக்கு இல்லாத தங்களது குறுகிய கண்ணோட்டத்தினையும் திறமையையும் மறைப்பதற்காக— எத்தனையோ கட்டுக் கதைகளை இட்டுக் கட்டுகிறார்கள்.

### கோரிக்கைகள்

சி ஐ. டி. யூ நிருவாகிகளின் இந்தக் கூட்டம் பின் கண்ட 4 கோரிக்கைகளை அரசு முன் வைக்கிறது.

1) மின்வெட்டை முழுமையாக ரத்தும் செய்யும் வகையில் உடனடியாக அவசர நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும்.

2) மின் வெட்டு அமலிலிருக்கும் காலங்களில் தொழிலாளர்களுக்கு முழுச் சம்பளம் அளிக்க தேவையான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

3) அன்மையில் திருத்தியமைக்கப்பட்டபடி அதிக சக்தியுள்ள மின்சாரத்தை பயன்படுத்துவோருக்கு 15 சதமானம் சர்சார்ஜ் வசூலிக்கப்படும் என்பதிலிருந்து சிறு தொழில்களுக்கும் சாதாரண சிறு வியாபாரிகளுக்கும் விலக்களிக்க வேண்டும்.

4) அலுமினியம் மற்றும் அது போன்ற தொழில்களுக்கு தற்போது அளிக்கப்பட்டு வரும் அபீதமான மின் கட்டண சலுகையை வாபஸ் பெற வேண்டும்,

### நூல் கொள்முதலை அரசே ஏற்க வேண்டும்

இங்க மின் வெட்டால் ஏற்படும் உற்பத்தி பாதிப்பைப் பயன்படுத்தி பஞ்சாலை முதலாளிகள், ஏற்கனவே நலிந்து போயிருக்கும் நெசவாளர்களின் வயிற்றில் மண்ணை அடிக்க நூல் விலையை ஏற்றி கொள்ளையடிப்பதை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

மில் முதலாளிகள் தாமாகவே நியாய விலையில் சமமாக நெசவாளர்களுக்கு நூலை விநியோகிக்க திட்டம் தீட்டியிருப்பதாக அடிக்கடி வானளாவப் பேசுகிறார்கள். இவ்வாறு பேசுவதெல்லாம் ஏற்கனவே இவர்கள் கடும் துன்பத்தால் அவதியுறும் நெசவாளர்கள் சாந்தப்படுத்துவதற்காகவும் — நூல் கொள்முதலை அரசாங்கமே ஏற்று நடத்தி நெசவாளர்களுக்கு நியாயமான விலையில் நூலை விநியோகம் செய்வதிலிருந்து தடுப்பதற்காகவுமே என்று இக்கூட்டம் கருதுகிறது.

மில் முதலாளிகளை அவர்கள் இஷ்டம் போல் கொள்ளையடிக்க விட்டு விட்டு கடும் துயருறும் ஏழை நெசவாளர்களின் மீது தி. மு. க. அரசு, போலீஸ் வன்முறையை ஏவிவிட்டிருப்பதற்கு இக்கூட்டம் தனது கடும் கண்டனத்தை தெரிவித்துக் கொள்கிறது.

சேலம் கைநெசவுத் தொழிலாளர்களின் மீது தி. மு. க. அரசு தொடுத்துள்ள அடக்குமுறையை உடனே நிறுத்த வேண்டும். அவர்கள் மீது போடப்பட்டுள்ள எல்லா வழக்குகளையும் வாபஸ் பெற வேண்டும்.

அரசாங்கமே நூலைக் கொள்முதல் செய்து அவற்றை நெசவாளர்களுக்கு நியாயமான விலையில் விநியோகிக்க ஏற்பாடு செய்ய உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இக்கூட்டம் வலியுறுத்துகிறது.

# வெள்ள நிவாரணப் பணிகளுக்காக ரூ 14 கோடி

சென்னை, பிப். 12—

சமீபத்தில் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள புயல், வெள்ளச் சேதங்களை சமாளிக்க நிவாரணப் பணிக்காக மத்திய அரசு ரூ. 14 கோடியே 25 லட்சம் வழங்கியுள்ளது. இதில் தமிழகத்திற்கு ஏற்கனவே மத்திய அரசு அளித்த 3½ கோடியும் அடங்கும்.

நடப்பாண்டிற்கு ரூ. 7½ கோடியும், அடுத்த ஆண்டிற்கு ரூ 7½ கோடியும் செலவிட தமிழக அரசு தீர்மானித்துள்ளது.

தமிழக அரசு நிவாரணப் பணிகளுக்காக மத்திய அரசிடம் கேட்டது ரூ 25 கோடி. ஆனால் கிடைத்ததோ ரூ 14 கோடியே 25 லட்சம்தான்.

# அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்க

# கேரளம் முழுதும் பந்த்

## போலீஸ் நிலையங்கள் முன் உண்ணாவிரதம்

திருவனந்தபுரம், பிப். 13—

கேரளமாநிலம்முழுவதும் பிப். 15-ம் தேதியன்று எல்லா போலீஸ் நிலையங்களின் முன்பும், அரசாங்க அக்கௌண்டன்ட் ஜெனரல் அலுவலகம் முன்பும் போலீஸ் அமைச்சர்இல்லத்தின் முன்பும் உண்ணாவிரதம் நடக்க இருக்கிறது.

17-ம் தேதி ஒவ்வொரு கிராமங்களிலும் தீப்பந்த ஊர்வலம் நடைபெறும்.

21-ம் தேதியன்றுகேரளா முழுவதும் 'பந்த்'நடைபெறுகிறது.

இந்தப் போராட்டங்கள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலான எதிர்க்கட்சிகளைக் கொண்ட "அடிப்படை உரிமை பாதுகாப்புக்குழு', வின் அறைகூவலுக்கிணங்க நடைபெறுகின்றன.

### நீசத்தனமான அடக்குமுறை

கேரளத்தில், வாழ்க்கையின் அடிப்படைக் கோரிக்கைகளுக்காக கடந்த ஒரு மாதத்திற்கு மேலாகப் போராடி வரும் அரசு ஊழியர்கள் - ஆசிரியர்கள் ஆகியோரின் போராட்டத்தின் மீது காங்கிரஸ் - வலது கம்யூனிஸ்ட் அரசாங்கம் நீசத்தனமான அடக்குமுறையை ஏவிவிட்டுள்ளது. வேலை நிறுத்தத்திற்கு அவசரச் சட்டம் பிறப்பித்துத் தடை செய்துள்ளது.

கோரிக்கைக்காகப் போராடும் உரிமையை அரசு தடை செய்து போலீஸ், குண்டர்களை எவி அடக்குமுறை நடத்தி வருகிறது இதை எதிர்க்கும் வகையில் தான் எதிர்க்கட்சிகள், அடிப்படை உரிமையைப்பாதுகாக்கும் புதிய போராட்டத்தை ஆரம்பித்துள்ளன.

அடக்குமுறைக்கு எதிராகப் போராட்டத்தை மேலும் தீவிரப்படுத்த வேண்டுமென எதிர்க்கட்சிகளின் அடிப்படை உரிமைப்பாதுகாப்புக்குழு தீர்மானித்திருக்கிறது என்று கன்வீனர்கள் தோழர் இ. பாலானந்தன், ஆர் பாலகிருஷ்ணபிள்ளை (எம் பி) அறிவித்துள்ளனர்.

### முதல் கட்டம்

கேரள அரசு ஊழியர்கள் செயலகம்முன் எதிர்க்கட்சி நாடாளுமன்ற உறுப்பினர்களும், சட்டமன்ற உறுப்பினர்களும் நடத்திய உண்ணாவிரதம் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும் போராட்டத்தின் முதல் கட்டம் என்று, தோழர் ஏ. கே கோபாலன் கூறியுள்ளார்.

பொதுக்கூட்டங்களில் ஒலிபெருக்கி வைப்பதற்குக் கூட அனுமதி கிடைப்பதில்லை என்பது மட்டுமல்ல. அதற்கு அனுமதி கிடைத்தாலும் அரசு ஊழியரின் போராட்டம் பற்றி பேசுவதற்கு அரசு விடுவதில்லை என்று தோழர் ஏ. கே. ஜி. குற்றம் சாட்டியுள்ளார்.

# அமெரிக்க கைதிகள் விடுதலை

ஹனோய், பிப். 13—

வியட்னும் சமாதான ஒப்பந்தப்படி முதல் தவணையாக வியட்னும் ஜனநாயகக் குடியரசு 40 அமெரிக்க போர்க்கைதிகளை விடுதலை செய்தது.

இவர்கள் விமானத்தில் அமெரிக்க செல்லும் வழியில் இன்று பீகிங் போய சேர்ந்தனர் அதேசமயத்தில் வியட்னும் ஜனநாயகக் குடியரசு 100 அமெரிக்க அமெரிக்க விமான சிப்பந்திகளையும் விடுதலை செய்தது

தென் வியட்னும் தற்காலிக புரட்சி அரசிற்கும், பொம்மை அரசாங்கத்திற்கும் ஏற்பட்ட தாவாவினுல் தென் வியட்னுமிலுள்ள லாக்தின் நகரில் 27 அமெரிக்க கைதிகள் விடுதலை செய்யப்படுவதில் பல மணி நேரம் தாமதப்பட்டது.

தென் வியட்னுமிலுள்ள கைதிகளைப்பார்க்க தென் வியட்னும் புரட்சி அரசின் பிரதிநிதிகளை பொம்மை அரசாங்கம் அனுமதிக்காததாலேயே இத்தகராறு எற்பட்டது. இதுபற்றி ஒரு சமரச உடன்பாடு ஏற்பட்ட பின்னரே அமெரிக்க கைதிகள் விடுதலை செய்யப்பட்டனர்.

# குற்றம் சாட்டியவரே நீதிபதியா? தொழிலாளர் கொந்தளிப்பு

தருமபுரி, பிப். 11—

தருமபுரி மாவட்டம் சின்னுறு அணைக்கட்டில் பணியாற்றும் பொதுப் பணித்துறைத் தொழிலாளர்கள் பிப்ரவரி 13ம் தேதி முதல் வேலைநிறுத்தம்செய்ய முடிவு செய்துள்ளனர்.

சின்னுறு அணைக்கட்டின் நிர்வாகப் பொறியாளர், தொழிலாளிகளை தரக்குறைவாகப் பேசியதோடல்லாமல் சட்ட விரோதமான முறையில் ஒரு தொழிலாளியை "சஸ்பெண்ட" செய்துள்ளனர். இது குறித்து தொழிலாளர்கள் நிர்வாகப்பொறியாளரை நேரில் சந்திக்க கூட்டாக 3ம் தேதியன்று வந்தனர். தொழிலாளர்கள் கூட்டாக வந்துள்ளதை வேலை நிறுத்தம் எனக்கூறி ஒரு நாள் சம்பளத்தைப்பிடித்தம் செய்ய உத்தரவிட்டார்.

### பேச்சுவார்த்தை தோல்வி

நிர்வாகப் பொறியாளர் இச்செயல் குறித்து தொழிற்சங்கத்தலைவர் சி கெ. மாதவன் தலைமையில் செயலாளர் வி. நாரோஜன, கினறு தொழிற்சங்கக் கிளையின் பிரதிநிதிகள் எ. விட்டல்நாதன், வீ. சுப்பிரமணியம் ஆகியோர் நிர்வாகப்பொறியாளரை பிப்ரவரி 2ம் தேதியனறும் 3ம் தேதியன்றும் சந்தித்துப்பேசினர்.

இதன் பின்னரும் பலன் ஏறபடாததால், பிப்ரவரி 3ம் தேதியன்று நடந்த தொழிலாளிகள் கூட்டத்தில் வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்தனர்.

### வேலைநிறுத்தம்

தொழிலாளிக்கு கொடுக்கப்பட்ட குற்றச்சாட்டு "கீழ்படியாமைக்" காக கொடுத்துவிட்டு, சட்ட விரோதமான வேலை நிறுத்தம் என்றுக் காரணம் கூறி ஒரு நாள் சம்பளப் பிடித்தம் செய்யப்படுகிறது.

நிர்வாகப் பொறியாளரே இந்தத் தகராறில் சம்பந்தப்பட்டிருப்பதால் அவரே தண்டனை விதிப்பதுகூடாது என்பது போன்ற சட்டக் காரணங்களுக்காக தொழிலாளிகள் வேலை நிறுத்தம செயய முடிவெடுத்துள்ளனர் என்று கூறி, பொதுப் பணித்துறை செயலாளர் பொதுப்பணித்துறை தலைமை பொறியாளர், சேலத்திலுள்ள மேற்பார்வை பொறியாளர் ஆகியோர்க்கு சங்கத்தின் மூலம் தந்தி அனுப்பியுள்ளனர்.

உடனடியாக சட்ட விரோதமான சம்பள வெட்டை ரத்து செய்து, பிரச்னையில் சுமுக முடிவு காண சம்மந்தப்பட்ட பொதுப்பணித்துறை உயரதிகாரிகள் தலையிடவேண்டும் என கோரியுள்ளனர்.

# நெல் அறுவடைக் கூலியை உயர்த்தித் தருக

## கம்பம் விவசாயத்தொழிலாளர்கள் கோரிக்கை

கம்பம், பிப். 13—

மதுரை மாவட்டம் கம்பம் பகுதியில் நெல அறுவடைக் கூலியை உயர்த்திக் கொடுக்கவேண்டுமென்றும் கூலி மரக்காலை பெரிய மரக்காளாக மாற்றவேண்டும் என்றும் விவசாயத் தொழிலாளர்கள கோரிக்கைவைத்துள்ளனர்.

சென்ற 5-ம் தேதியன்று இரவு கம்பத்தில் விவசாயத் தொழிலாளர்களும், கொத்துக்காரர்களும் கலந்து கொண்ட கூட்டம் நடைபெற்றது. அதில், நெல் அறுவடைக் கூலி உயர்வு பற்றிய கீழ்க்கண்ட கோரிக்கைகள் எழுப்புவதென முடிவு செய்யப்பட்டது. விலைவாசி விஷம் போல் உயர்ந்துகொண்டே போகிறது. வாழ்க்கைச்செலவும் அதிகரித்துக் கொண்டே போகிறது.

கூலி மரக்கால் என்பது கூலிவேலை ஏற்பட்டது முதல் நூற்றுண்டு காலங்களாக மாருது அப்படியே இருந்து வருகிறது. குத்தகை மரக்காலும் அப்படியே. உழைப்புக்கு கூலிபோடும் மரக்கால்தான். ஆனல் அது மூன்றுபடி கொண்ட கூலி மரக்கால். குத்தகைதாரிடமிருந்து நெல் வாங்கவும் மரக்கால்தான். ஆனல் அது நாலேகாலும் அதற்கு மேலும் கொள்ளும் குத்தகை மரக்கால். இந்த அநியாயம்-இந்தகொடுமை மாறவேண்டும நான்கு பக்காப்படி கொண்ட பெரிய மரக்காலிலேயே போடவேண்டும். கூலியில் உயர்வு வேண்டும்.

### கோரிக்கை

ஆகவே தற்போதைய அறுவடையில் சம்பா, கோயில் சம்பா, உசும்பா, தங்கமணி போன்ற வழக்கமாகப்பயிரிடும நெல்லுக்கு செய் ஒன்றுக்கு அறுவடை கூலி 4 பக்காப்படிகொண்ட பெரிய மரக்காலில் குறைந்த பட்சம் நாலரைக்கலம் நெல் போட வேண்டும். ஐ. ஆர். 8 ஐ. ஆர். 20 போன்ற அமோக விளைச்சல் உள்ள குட்டை நெல் சாகுபடியாயிருந்தால் செய் ஒன்றுக்கு பெரிய மரக்காலில் குறைந்த பட்சம் ஆறுகலம் அறுவடை கூலி போட வேண்டும.

(7ம் பத்தி பார்க்க)

(6-ம் பத்தி தொடர்ச்சி)

களத்திலிருந்து வயலின் தூரத்துக்கும், வேலைச்சிரமத்துக்கும் தகுந்தாற்போல் கூலியை குறைந்த பட்சத்திற்கு மேல் உயர்த்திக் கொடுக்கவேண்டும்.

சுதந்திரம், வாழ்த்துபுள்ளிகாரர்களின் மாமூல கூலி போன்ற சகல உரிமைகளும் வழக்கம் போல் வழங்கப்பட வேண்டும். இவையும் பெரிய மரக்காலிலேயே அளக்கப்பட வேண்டும்.

### உறுதி காட்டுவீர்

நிலச் சொந்தக்காரர்கள் கடந்த அறுவடையை போலவே தற்போதும் இந்த கோரிக்கைகளை வழங்க வேண்டுமென்றும் விவசாயத் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றுபட்டு தங்களது கோரிக்கைகளை அடைவதில் உறுதி காட்ட வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறோம்.

கம்பம் பகுதியில் கடந்த நெல் நடவின் போதும் அறுவடையின் போதும் விவசாயத் தொழிலாளர் அனைவரும் ஒன்றுபட்டு கோரிக்கை வைத்து போராடி வெற்றி பெற்றார்கள்.

களத்துமேட்டில் நெல்லை அடிக்துக் கொடுப்பதற்கு தனி ஏற்பாடு செய்து கொள்ள வேண்டுமென்று கோரி, அதில் வெற்றி பெற்றார்கள். வயலுக்கும் களத்துமேட்டிற்கும் உள்ள தூரத்துக்கேற்ப அறுவடை கூலியில் ஓரளவு உயர்வு பெற்றார்கள் நடவுக்கும் நெல் கூலியையே பெற்றார்கள்.

# திறமையில்லாதவர்கள் ஆட்சியில்

(நமது சிறப்புச் செய்தியாளர்)

சென்னை, பிப் 13—

சென்னைக்கருகிலுள்ள கல்பாக்க அணு மின்சார நிலைய வேலைகள் ஆமை வேகத்தில் முன்னேறிக்கொண்டிருக்கிறது. இதனைத் துரிதமாக முடிக்கும் திறமைகள் சாதனங்கள் இருந்த போதிலும் என்ன காரணத்தாலோ, ஆட்சியாளர்களும், அவர்களது மரமண்டை அதிகார வர்க்கமும் காலம் தாழ்த்திக்கொண்டே வருகிறார்கள். இதற்கு முக்கியமான காரணம் இந்த வேலைகள் அனைத்தும் காண்டிராக்டர்களை நம்பி நடப்பதே என்று தெரிகிறது.

இன்றை மின்சார நெருக்கடியில் சென்னையிலுள்ள இருபெரும் மின் நிலையங்கள் தம் முழு சக்தியையும் பயன் படுத்தவில்லை.

உதாரணமாக, எண்ணூர் அனல் மின்சார நிலையத்தின் முழு சக்தி 230 மிலியன்வாட். ஆனல் இன்று உற்பத்தியாவது எவ்வளவு தெரியுமா? 150 மிலியன்வாட் தான்.

பேசின்பிரிட்ஜ் மின் நிலயத்தின் முழுசக்தி என்ன தெரியுமா? 90 மிலியன் வாட். ஆனல் இன்று உற்பத்தியாவதோ 40 மிலியன்வாட் தான்,

100 மிலி. கிலோவாட் எடுக்க கூடிய அளவில் கோதையாறில் இருப்பவர் ஹவுஸ்கள் (மின் நிலயங்கள்) கட்டி முடிந்து எட்டு ஆண்டுகள் மறைந்து விட்டன. இங்கு தண்ணீர் மட்டுமோ முழுமையாக உள்ளது. ஆனலும் மின் எடுக்கப் படவில்லை. தமிழ்நாடு மின் வாரியத்தின் இதை விட கேடுகெட்ட கையாலாகாத்தனம் வேறு எதுவும் இருக்க முடியுமா?



# ஆட்டோரிக்சா டிரைவர்கள் சங்கத்தின் ஆண்டு விழா

திருச்சி, பிப் 9—

திருச்சி ஆட்டோரிக்சா டிரைவர்கள் சங்கத்தின் 4-வது ஆண்டு தேர்தல் மகாசபைக் கூட்டம் பிப். 6ல் அலுவலகத்தில் நடந்தது. அக்கூட்டததில் 1973ம் ஆண்டுக்கான நிர்வாகிகள் தேர்ந்து எடுக்கப்பட்டார்கள்.

சங்கத் தலைவராக திரு. ஆர். உமாநாத்தும், துணைத்தலைவராக ஏ எல் சண்முகமும், பொது செயலாளராக கே ஆர் சந்திரமௌலியும், துணைச்செயலாளராக வி. பழனியப்பனும், பொருளாளராக பிராமன்குட்டியும், மற்றும் எஸ். கோபால். வி. சங்கரன், எம். வேலு, ஜி கிருஷ்ணராவ், ஆர் சதாசிவம். ஏ ஆர் ராஜ முகம்மது, ஆர் செல்லமுத்து, எம் ராமலிங்கம், ஜோசப் ஆகிய 9 பேர் நிர்வாக கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்து எடுக்கப்பட்டனர்.

# சுதந்திரப் போராட்ட வீரர் சந்தாச்சு காலமானர்

மதுரை, பிப். 11—

இந்திய சுதந்திரப் போராட்டத்தில் 1923 முதல் ஈடுபட்டு, பன்முறை சிறையிலடைக்கப்பட்ட பழம் பெரும்தேசபக்தர் சுந்தாச்சு என்றழைக்கப்படும் சுந்தர ராஜய்யங்கார் அவர்கள், தமது 73வது வயதில், மதுரை தானப்ப முதலி தெருவிலுள்ள அவரது இல்லத்தில் 11—2—73-ல் காலமானர்.

தத்தனேரி மயானத்தில் திரு. சிதம்பர பாரதி தலைமையில் நடந்த இரங்கற் கூட்டத்தில், பல கட்சித் தலைவர்களும் அவரது தியாகங்களைப் பாராட்டிப் பேசினர்கள்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் ஐ. மாயாண்டி பாரதி, பழைய போராட்ட நினைவுகளை எடுத்துரைத்து அஞ்சலி செலுத்தினர்.

# பெட்ரோமாக்ஸ், அரிக்கன் லைட் விலைகள் தாவிக்குதிக்கின்றன

மதுரை, பிப். 13—

மின்சார வெட்டின் விளைவாக வீடுகளும் கடைகளும், தொழிற் கூடங்களும் அலுவலகங்களும் இருண்டு கிடக்கின்றன.

எல்லோரும் அரிகசன் லைட்டுகள் வாங்கவும், பெட்ரோமாக்ஸ் லைட்டு வாங்கவும் போட்டி போடுகிறார்கள்.

லைட்டு கடைகளில் ஒரே கூட்டமாக இருக்கிறது. மெழுகுவர்த்திக்குக்கூட கிராககி வந்து விட்டது.

ஆறரை ரூபாய்க்கும் ஏழரை ரூபாய்க்கும் விற்கப்பட்டு வந்த சன் அரிக்கன் லைட்டுகளின் விலை, இப்போது ரூ16 வரை ஏறி விட்டது,

100 ரூபாய் 110 ரூபாய்க்கு நல்ல பெட்ரோமாக்ஸ் லைட்டு விற்றது. இப்போது சொத்தை லைட்டே 150க்கும் மேல் ஓடி விட்டது.

### சீமைத் தண்ணி

மண்ணெண்ணெய் விலையும் இதுதான் சமயமென்று எகிறி விட்டது. சென்ற மாதம் 60 பைசாவுக்கு கிடைத்த 1 லிட்டர் சீமைத்தண்ணி, இந்த மாதம் ஒரு ரூபாய்க்கும் மேலாகி விட்டது.

அது கூட கிடைக்காமல் ஜனங்கள் அலைமோதுகின்றன. ஸ்டவ் அடுப்புகளையே நம்பிக் கிடக்கும் மக்கள் படும்பாடு சொல்லும் தரமன்று.

மெழுகுவர்த்தி கூட சந்தடிச் சாக்கில் தனது விலையை ஏற்றிக் கொண்டு விட்டது.

சீமைத் தண்ணிக் கூடுகள் விற்கும் கடைகளிலும் கூட, கூட்டம் நிறைந்திருக்கிறது.

### பம்பு ஷெட்டு

பம்பு ஷெட்டு விவசாயிகளோ, தலையிலே கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்கள். பத்தாயிரம் இருபதாயிரம் போட்டு சொந்த ஜென்ரேட்டர் வாங்கி ஓட்டினல், மின் வெட்டு தீர்ந்தவுடன், கால் தமபிடிக்குக் கூட யாரும் வாங்க மாட்டார்களே என்று வருந்துகிறார்கள். அந்த அளவுக்கு பணத்துக்கு எங்கே போவது என்றும் கண் கலங்குகிறார்கள். கிணற்றில் தண்ணீர் இருந்தும் வயலுக்குப் பாய்ச்ச வழியில்லாமல், பயிர்களெல்லாம் வாடுகின்றன.

இந்த மின்வெட்டு மேலும் மேலும் அதிகமாகிறதே தவிர, சீக்கிரம் குறைந்து, பழைய நிலை ஏற்படுமென்பதற்கு அறிகுறியே காணவில்லையே, அதுவரை எப்படித் தாக்குப் பிடிப்பது? என்ன செய்வது என்று கையைப் பிசைகிறார்கள்.

# டெக்னிக்கல் கல்வி டைரக்டர் அன்று கொடுத்த வாக்குறுதி

தொழில் நுட்பக் கல்வி டைரக்டர் திரு. பி. சிவலிங்கம் அவர்களை, தமிழக பாலிடெக்னிக் மாணவர் பிரதிநிதிகள் சந்தித்து, மகஜர் கொடுத்துப் பேசினார்கள் அல்லவா!

இந்தப் பேச்சையடுத்து, 20—10—1972ந் தேதியிட்ட மெமோரண்டம் நம்பர் பி. சி.—டி. டி. இ.—27 சுற்றறிக்கையை அனைத்து அரசாங்க பாலிடெக்னிக், பிரைவேட் பாலிடெக்னிக் ஆகியவற்றின் பிரின்சிபால்களுக்கு அனுப்பப்பட்டது.

## சுற்றறிக்கை விபரம்

அதில் கண்ட விபரத்தை இங்கே காணலாம்:

பல்வேறு பாலிடெக்னிக் மாணவர் பேரவைகளின் தலைவர், செயலாளர்கள் மற்றும் மாணவர் பிரதிநிதிகள் 20—10—1972-ல் டெக்னிகல் கல்வி டைரக்டரைச் சந்தித்து மகஜர் கொடுத்தது, பல்வேறு பிரச்னைகளைப் பற்றியும் விவாதித்தார்கள். விவரமான அவர்களது கோரிக்கைகளைப் பரிசீலிப்பதாகவும், கூடிய சீக்கிரமே தக்க நடவடிக்கை எடுப்பதாகவும் டைரக்டர் இணக்கம் தெரிவித்துள்ளார்.

1962-ம் ஆண்டுக்கு முன்னதாக இருந்து வந்தது போல—டிப்ளமாக்காரர்களுக்கும் பட்டதாரித் தொகுதியில் ஒரு இடம் கிடைக்க, அவசியமான நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்.

மீன் இலாகாவில் டெக்னிகல் வேலைகளுக்கு டிப்ளமாக்காரர்களையும் நியமிப்பது குறித்து ஆலோசிக்க வேண்டுமென அரசாங்கத்துக்கு எழுதப்பட்டுள்ளது.

மெடிக்கல் அட்டெண்டன்ஸ் பற்றி — உண்மையிலேயே அந்த மாணவர் நோய்வாய்ப்பட்டிருந்தால் அதிகாரப் பூர்வமாகப் பதிவு பெற்ற வைத்தியரிடம் மெடிகல் சர்டிபிகேட் வாங்கி வந்தால், அதற்கு உகந்தவாறு, எல்லா பிரின்சிபால்களுக்கும் கட்டளை பிறப்பிப்பதாகவும் டைரக்டர் வாக்குறுதி அளித்துள்ளார்.

'இண்டர்னல் அசெஸ்மெண்டை'ப் பொருத்த வரையில், மாணவர்கள் தங்களை உப குழுக்களாக அமைத்துக் கொள்ள வேண்டுமெனவும், அவர்களுக்கு ஏற்படும் கஷ்டங்களைப் பற்றிக் கூறி, அவற்றை நிவர்த்திக்க ஏதேனும் ஆலோசனைகள் கூறலாமென்றும் கூறப்பட்டது. இவற்றையெல்லாம் கல்வி போர்டு முன்னால் வைக்கப்படும்.

செமஸ்டர் முறையைப் பொருத்த வரையில் —வகுப்பு கொடுப்பது பற்றி—முதல் வகுப்புக்காக— இறுதி ஆண்டில் அவர்கள் எடுக்கும் மார்க்குகளைப் பொறுத்து இருக்க வேண்டுமென்பதைப் பற்றியும், அரசாங்கத்துக்கு சிபாரிசு செய்வதற்கு முன்னதாக, கல்வி போர்டு முன்னால் வைக்கப்படும்.

---

# கட்சி நிதி

## உத்தமபாளையம்-பெரியகுளம் தாலுகாக்களில் ரூ. 22,394-90 வசூல்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி — 'தீக்கதிர்' நாளிதழ்' வளர்ச்சி நிதிக்காக, மதுரை மாவட்டம் உத்தமபாளையம் — பெரியகுளம் தாலுகாக்களில் கடந்த 10, 11 தேதிகளில் நடந்த நிதியளிப்புக் கூட்டங்களில், தோழர் இ. எம். எஸ் நம்பூதிரிபாட் அவர்களிடம் 22 ஆயிரத்து 394 ரூபாய் 90 காசு அளிக்கப்பட்டது. கிளைகள் வாரியான விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| வரதராஜபுரம் | 46—00 |
| கன்னியப்பபிள்ளைபட்டி | 17—00 |
| ஜக்கம்பட்டி—ஆண்டிபட்டி | 410—00 |
| ஏச்தக்கோவில் | 135—00 |
| ஆசாரிபட்டி | 9—00 |
| பெரியகுளம் | 1695—10 |
| போடி | 2043—50 |
| தேனி—அல்லிநகரம் | 2079—00 |
| முத்துத்தேவன்பட்டி | 41—00 |
| அம்மச்சியாபுரம் | 15—00 |
| கோவிந்தநகரம் | 35—00 |
| ஜெயமங்கலம் | 200—00 |
| கோபாலபுரம் | 50—00 |
| எட்டப்பராஜபுரம் | 205—00 |
| கண்டமனூர் | 100—00 |
| அம்பாசமுத்திரம் | 270—00 |
| லட்சுமிபுரம் | 502—00 |
| பி மீனாட்சிபுரம் | 10—00 |
| சொக்கநாதபுரம் | 10—00 |
| விசுவாசபுரம் | 5—00 |
| உப்புக்கோட்டை | 25—00 |
| மாணிக்காபுரம் | 10—00 |
| அம்மாபட்டி | 10—00 |
| கோம்பை | 471—00 |
| சின்னமனூர் | 285—00 |
| டி சிந்தலச்சேரி | 10—00 |
| அணைக்கரைப்பட்டி | 5—00 |
| பண்ணைப்புரம் | 51—00 |
| வெள்ளையம்மாள்புரம் | 75—00 |
| மூர்த்தி நாயக்கன்பட்டி | 20—00 |
| உத்தமபாளையம் | 1699—00 |
| க புதுப்பட்டி | 952—00 |
| கே. கே. பட்டி | 301—00 |
| லோயர் கேம்ப், சுருளி ஸ்கீம் | 425—00 |
| சுருளிப்பட்டி | 113—00 |
| கம்பம் | 6195—00 |
| கூடலூர் | 3214—00 |
| தேவாரம் | 400—00 |
| கதிர் நரசிங்கபுரம் | 46—00 |
| அனுமந்தன்பட்டி | 10—05 |
| பொது வசூல் | 200—00 |
| மொத்த வசூல்: | 22,394—00 |

---

## தமிழக காண்ட்ராக்ட் முறை எதிர்ப்பு மாநாடு

# ஆட்சியாளரின் ஏமாற்றுவித்தை அம்பலம்

## ஒன்றுபட்டு போராட வேண்டுகோள்

சேலம், பிப். 12—

தமிழக காண்ட்ராக்ட்முறை எதிர்ப்பு மாநாடு பிப்ரவரி 9, 10 தேதிகளில் பழைய சூரமங்கலத்தில் நடைபெற்றது. சேலம் ஜில்லா மாக்னசைட் லேபர் யூனியனின் சொந்த இடத்தில அமைக்கப்பட்டிருந்த சேலம் சிறை தியாகிகள் மன்றத்தில் மாநாடு நடைபெற்றது.

பிப். 9 காலை 11 மணிக்கு சேலம் சிறை வாயிலில் தியாகிகளின் ஜோதி ஏற்றப்பட்டு, 1950 பிப்ரவரி 11-ல் தியாகிகளுடன் சிறையிலிருந்த தோழர் இளையப்பன் தலைமையில் ஊர்வலமாகக் கொண்டு வரப்பட்டது. மாநாட்டுப் பந்தலில் அந்த ஜோதி தோழர் ஏ நல்ல சிவன் கையில் கொடுக்கப்பட்டது அவரே செங்கொடியையும் ஏற்றி வைத்தார். பின்னர் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தோழர்கள் வி. ராமசாமி, அமரப்பன் இருவரும தலைமைக்குழுவாகச் செயல்பட்டனர். மாநில முழுவதிலுமிருந்து 80 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். தோழர் ஏ. நல்லசிவனும், சி. ஐ. டி. யூ தமிழ் மாநிலக் குழு உப தலைவர் தோழர் சி. கோவிந்தராஜனும் இன்று நாட்டில் நிலவும் அரசியல் பொருளாதார நிலைமையையும், ஒன்றுபட்டு போராடுவதற்கான தொழிற்சங்கங்களின் கடமையையும், மத்திய காண்ட்ராக்ட் சட்டங்களிலுள்ள ஊனங்களையும், அவற்றை எதிர்த்துப் போராட வேண்டிய அவசியத்தையும் விளக்கிப் பேசினார்கள்.

### பிரதிநிதிகள் விவாதம்

பின்னர் நடந்த விவாதத்தில் பேசிய 10 தோழர்கள் தங்கள் தங்கள் பகுதிகளில் காண்டராக்ட்முறை எப்படி அமுல் நடத்தப்படுகிறது என்பதையும் தொழிலாளர்கள் கடுமையாகச் சுரண்டப்படுவதையும், அதை எதிர்த்து நடந்துள்ள போராட்டங்களையும் விளக்கிக் கூறினார்கள்.

கோவை மாவட்டத்தில் இயங்கும் தமிழ்நாடு கட்டடத் தொழிலாளர் முன்னணி சங்கத்தின் அனுபவங்களை செயலாளர் தோழர் எஸ் நாச்சிமுத்து பி இ. எடுத்துக் கூறியது மிகவும் உற்சாகம் அளிக்கத்தக்கதாக இருந்தது.

சேலத்திலுள்ள மேக்னசைட் சுரங்கங்களில் சி ஐ டி யூ சங்கத் தலைமையின் கீழ் நடந்த போராட்டங்களின் மூலம் 80 சதவீதத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் (சுமார் ஆறுயிரம் பேர்) கம்பெனித் தொழிலாளர்களாக நிரந்தரமாக்கப்பட்ட சாதனையும் நம்பிக்கையூட்டுவதாக இருந்தது

### தி. மு. க. அரசுக்கு கண்டனம்

தமிழக அரசு மத்திய சட்டத்தின் கீழ் வகுக்க வேண்டிய விதிகளை வகுக்காமலும், சட்டத்தை அமுல் நடத்த போர்டை நியமிக்காமலும் காலம் கடத்தி வருவதோடு மட்டுமல்லாமல், பொதுப் பணித்துறை, குடியிருப்பு வாரியம் போன்ற மற்றும் பல அமைப்புக்களின் மூலம் காண்ட்ராக்ட் முறையை விஸ்தரித்து வருவதை பிரதிநிதிகள் கண்டித்தனர். தி மு க. அரசு தன் கட்சித் தலைவர்கள் பலர் பணம் சம்பாதிப்பதற்கு உதவும் முறையில் இந்தக் காண்ட்ராகட்முறையை விஸ்தரித்து வருவதை பிரதிநிதிகள் கண்டித்துப் பேசினர்.

10—2—73 அன்று தோழர் உமாநாத் மாநாட்டில் பேசினார். காண்ட்ராக்ட் முறையை ஒழிக்காமல் அதை ஒழுங்கு படுத்துவோம் என்று கூறி உழைப்பாளி மக்களை ஏமாற்ற மத்திய அரசு எப்படியெல்லாம் சாகஸம் செய்கிறது என்பதை விளக்கினர். மேலும் இந்திய நாட்டை முதலாளித்துவப் பாதையில் இழுத்துச் செல்லும் பெரு முதலாளிகளின அரசு, மூலதனம் சேர்ப்பதற்காக உழைப்பாளி மக்களைக் கடுமையாகச் சுரண்ட பயன் படுத்தும் உபாயங்களில் ஒன்றுதான், காண்ட்ராக்ட் முறை என்பதை தெளிவாக விளக்கினர். அடித்தட்டில் உள்ள காண்ட்ராக்ட் தொழிலாளர்களை தட்டி எழுப்பிஸ்தாபனம் அமைத்து போராட வைப்பதற்கு நிரந்தரத் தொழிலாளர்களும் அவர்களுடைய சங்கங்களும் முன் முயற்சி எடுக்க வேண்டும் என்பதையும் வலியுறுத்தினர்.

விவாதத்தை முடித்து வைத்து தோழர் ஏ. நல்லசிவன் பேசுகையில் மாவட்ட ரீதியாகவும், பிரதேச ரீதியாகவும் காண்ட்ராக்ட் முறை எதிர்ப்பு மாநாடுகள் நடத்த ஏற்பாடு செய்யும்படி சி. ஐ. டி. யூ. நிர்வாகக் குழுவை கேட்டுக் கொள்ள வேண்டும் என்று யோசனை தெரிவித்தார். மாநாடு அந்த யோசனையை ஏற்றுக்கொண்டது.

மத்திய சட்டத்தின் கீழ் விதிகளை இயற்றும்படியும், போர்டு நியக்கும்படியும் தமிழக அரசை வற்புறுத்தி மாநில ரீதியாக ஊர்வல ஆர்பாட்டங்களும், பொதுக் கூட்டங்களும் நடத்த ஒரு தேதியை நிர்ணயிக்குமாறு சி. ஐ டி. யூ. மாநிலக் குழுவைக் கேட்டுக் கொள்வதென்றும் தீர்மானிக்கப் பட்டது.

### தீர்மானங்கள்

1) காண்ட்ராக்ட் முறை ஒழுங்கு படுத்தல் என்ற அம்சத்தை அறவே நீக்கி காண்ட்ராக்ட் முறையை முழுமையாக ரத்து செய்யும் முறையில் மத்திய சட்டத்தை திருத்தும்படி மத்திய அரசைக் கோருவது.

2) விதிகளை இயற்றி போர்டு அமைத்து உடனடியாக மத்திய சட்டத்தை தமிழகத்தில் அமுல் படுத்துமாறு தமிழக அரசை வற்புறுத்துவது.

3) நூற்பாலைகளிலிருந்து போதிய அளவு நூலை கொள் முதல் செய்து எல்லாக் கைத்தறி நெசவாளர்க்கும் தேவையான அளவு நூலை கண்ட்ரோல் விலைக்கு வினியோகிக்குமாறு தமிழக அரசை கோருவது.

4) சேலம் அம்மாபேட்டை கைத்தறி நெசவாளர்கள் மீது நடத்தியுள்ள கொடுமையான அடக்குமுறையை கண்டித்து, நீதி விசாரணைக்கு ஏற்பாடு செய்யுமாறு தமிழக அரசைக்கோருவது.

5) மூட்டப்பட்டிருக்கும் கெஜல்நாயக்கன்பட்டி அண்ணமலை "வேஸ்ட் காட்டன்" மில்லை உடனே திறக்க வைக்கும்படி தமிழக அரசைக் கோருவது.

6) சேலம் தர்மபுரி மாவட்டங்களில் வெள்ளத்தால் படுகுழிகளாக ஆக்கப்பட்டுள்ள விளை நிலங்களில் மண்ணை நிரப்பி விவசாயத்திற்கு லாயக்குள்ளதாக்க உதவும்படி தமிழக அரசை கோருவது. வெள்ளத்தால் வீடிழந்தோர்க்கு வீடு கட்டி தரும்படி கோருவது.

7) மேட்டூர் மால்கோ கம்பெனி போராட்டம் சம்பந்தமாக தோழர்கள் சீரங்கன், வி. எம். நாராயணன் மீது போடப்பட்டுள்ள வழக்கையும், அண்ணமலை மில் தொழிற் சங்க நிர்வாகிகள் ஐந்து பேர் மீது போடப்பட்டுள்ள வழக்கையும் வாபஸ் பெறுமாறு தமிழக அரசைக் கோருவது.

8) போலீஸ் உதவியுடன் ரவுடிகளைக் கொண்டு நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலைத் தொழிலாளர் சங்கத்தைக் கைப்பற்ற வந்த நிலப்பிரபுகளுக்கும், முதலாளிக்கும் சாதகமாக சங்கத்திற்கு சீல் வைத்திருப்பதைக் கண்டித்து சங்கக் கட்டிடத்தை சங்கத் தலைவர் தோழர் கோவிந்தராஜனிடம ஒப்படைக்கும்படி தமிழக அரசைக் கோருவது.

9) மூங்கில் துறைப்பட்டு கூட்டுறவு சர்க்கரை ஆலையில் நடைபெறும் வேலை நிறுத்தத்தை முறியடிக்க தமிழக அரசின் தொழில் இலாக்கா முயற்சித்து வருவதைக் கண்டித்ததுடன் தொழிலாளர்களின் நியாயமான போனஸ் கோரிக்கையை ஏற்கும்படி தமிழக அரசை வற்புறுத்துவது ஆகிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாக்னசைட் லேபர் யூனியனின் செயலாளர் தோழர் ஏ. பெரியதம்பி (வரவேற்பு குழு செயலாளர்) நன்றி கூறினார்.

இம்மாநாட்டை நடத்துவதற்கு ஏற்பட்ட செலவு சுமார் 1200 ரூபாயை சேலம மாவட்ட சி ஐ டி யூ சங்கங்கள் வசூலித்துக் கொடுத்தன. மாநாட்டை ஒட்டி பிப். 9-ல் சூரமங்கலத்திலும், பிப் 10ல் சேலம் போஸ் மைதானத்திலும் மாபெரும் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன.

அவற்றில் தோழர்கள் உமாநாத், சி. கோவிந்தராஜன், கே. எஸ். அர்த்தனாரி, வி. ராமசாமி ஆகியோர் பேசினர்.

—நமது தொழிற்சங்க நிருபர்

---

# கெட்டுப்போன ரூபாய் நோட்டுகளை எண்ணிசோதிக்காமல் எரிப்பதா?

## ரிசர்வ் பேங்க் ஊழியர்கள் எதிர்ப்பு

பம்பாய், டிச. 13—

கான்பூரில் 9-2-73 முதல் வேலை நிறுத்தப்போராட்டத்தில இறங்கியிருக்கும ரிசர்வ் பேங்க் ஊழியர்களுக்கு, ஆதரவு திரட்டுவதில பமபாய் ரிசர்வ்பேங்க் ஊழியர்கள் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறார்கள்.

ரிசர்வ் பேங்க் அதிகாரிகள் இதுவரை கடைப்பிடித்துவந்த வழக்கத்தைக் கைவிட்டு விட்டு, அழிக்கப்படவேண்டிய கரன்சி நோட்டுகளை எண்ணி அழிக்காமல், அப்படியே அழித்து விடுகிறார்கள.

முன்பெல்லாம், கெட்டுப்போன நோட்டுகளை, ரூ 1, ரூ 2 ரூ. 5, ரூ 10, ரூ 20, ரூ. 100 என்று இப்படி இன வாரியாகப் பிரித்து வைப்பார்கள். ஒவ்வொரு இனத்திலும் எததனை நோட்டுகள் இருக்கின்றன என்று எண்ணுவார்கள். பிறகு அந்த நோட்டுகளை கள்ள நோட்டுகளா என்று ஒப்பிட்டுப் பார்த்து சோதித்து பரிசீலனை செய்வார்கள்.

இந்த மாதிரி தான் கெட்டுப்போன நோட்டுகளை அழிக்கவேண்டும என்று, விசேஷ சட்ட விதிகள் உள்ளன.

### சங்கத் தலைவர் கூறுவது என்ன?

ரிசர்வ் பேங்க் ஊழியர்கள் சங்கத்தலைவர் இது குறித்து என்ன சொல்லுகிறார்?

கெட்டுப்போன நோட்டுகளை சட்டவிதிகளின்படி அழிக்காமல், மொத்தமாகப் போட்டு எரிக்கிறார்கள். இதனால் பலவிதமான ஊழல்களும், மோசடிகளும் நடத்த இடம் ஏற்படுகிறது. இதனால் பேங்கு நோட்டுகள் மீதே பொதுமக்கள் நம்பிக்கை இழந்து போவார்கள் என்று கூறினர்.

---

## ஊசி உற்பத்தி தொழிலாளர்

# 500 பேர் வேலை நிறுத்தம்

நீலகிரி, பிப். 12—

கேத்தியிலுள்ள ஊசி உற்பத்தித் தொழிலாளர்கள் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்துள்ளனர்,

### கோரிக்கைகள்

இந்தொழிற் சாலையில் மிகவும குறைந்த கூலியே தருகிறார்கள், அதாவது ஆணுக்கு தினகூலி ரூ 2-50 பெண்ணுக்கு ரூ 2-00 தான் தருகிறார்கள், இத்தொழிற் சாலையிலுள்ள தொழிலாளர்கள் அனைவரும் (சுமார் 800 பேர்) கேசுவல் தொழிலாளராக வைக்கப்பட்டு சட்ட பூர்வமாக கிடைக்கக்கூடிய சலுகைகள் மறுக்கப்படுகின்றன.

நிர்வாகம் எப்போது வேண்டுமானாலும் தொழிலாளர்களை 'டிஸ்மிஸ்' செய்யலாம்; 8 மணி நேரத்திற்கு மேல் வேலை செய்தால் 'ஓவர்டைம்' சலுகை கிடையாது- இது போன்ற குறைகளை நீக்கக் கோரியும் மேலும் பல நியாயமான கோரிக்கைகளை வைத்தும் தொழிலாளர்கள் போராடுகின்றனர்.

நிர்வாகத்தின் கொடுமைக்கு ஆளான ஆண், பெண் தொழிலாளர்கள் சி. ஐ. டி. யூ. வின் கீழ் அணிதிரண்டு பிப். 6 முதல் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

பிப். 8ந் தேதி மாலையில், தொழிற்சாலை முன்பிருந்து 300 பெண்கள் உட்பட சுமார் 500 தொழிலாளர்கள் கையில் செங்கொடியேந்தியவண்ணம் 'கேசுவல் தொழிலாளர்களை நிரந்தரமாக்கு" "சம்பள உயர்வு உடனே கொடு" போன்ற முழக்கங்களை எழுப்பிக்கொண்டு கேத்தி, சாநதூர் பகுதிகளில் ஊர்வலம் வந்தனர்.

பின்னர் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் பி செல்லமுத்து, கே. ராஜன் கே. எம் குட்டன். கோவை மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் ஆர். வெங்கிடு ஆகியோர் கோரிக்கைகளை விளக்கிப் பேசினர். ஏராளமான கிராமப்புற மக்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

---

# சங்கம் இல்லாதவர்களுக்கும் உரிமைகள் கிடைக்கச் சட்டம்

## குஜராத் அரசுக்கு பரிந்துரை

ஆமதாபாத், பிப். 13—

குஜராத் மாநிலத்திலுள்ள கட்டிடத் தொழிலாளர்களுக்கும், காடுகளில் வேலை செய்பவர்களுக்கும், அன்றாடக் கூலித் தொழிலாளர்களுக்கும், கச்சு, கொல்லுத் தொழிலாளர்களுக்கும் பாதுகாப்புக் கொடுக்கவும், குறைந்த பட்ச வாழ்க்கை நிலைமைகளுக்கு உத்தரவாதம் கொடுக்கவும், குஜராத் அரசு ஒரு சட்டம் கொண்டு வரப்போவதாக அறிவித்துள்ளது.

அதுகுறித்து சிபாரிசு செய்யுமாறு எம். பி. தேசாய் தலைமையில் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அக்கமிட்டி ஒரு பரிந்துரை வழங்கி இருக்கிறது.

பஞ்சாயத்து, நகரசபை. கார்ப்பரேஷன் போன்ற ஸ்தலஸ்தாபன அமைப்புகள் இதற்கென போர்டுகள் அமைக்க வேண்டுமென்றும், இந்த தொழிலாளர்களின் கூலி ஒருபுறமிருக்க, காண்ட்ராக்டர்கள் இவர்களுக்கு எந்த அளவுக்கு கூடுதல் பட்ச வாழ்க்கை வசதிகளை அளிக்கவேண்டும் என்பதை இந்த போர்டுகள் பார்த்துக்கொள்ள வேண்டும்.

ரயில்வேயில் சுமை ஏற்றுகிறவர்கள், இறக்குபவர்களுக்கு ஒரு போர்டு அமைக்கப்படுமாம். அது போல, மார்கெட்டுகளில் பாரம் ஏற்றி இறக்குகிறவர்களுக்கும ஒரு போர்டு நியமிக்கப்பட வேண்டும். இது போன்று பல போர்டுகளும் ஏற்படுத்தப் போவதாகத் தெரிகிறது.

குறைந்த எண்ணிக்கையில் ஒருதொழிலில் ஈடுபட்டிருந்தாலும், அவர்களுக்கும் நியாயக் கூலியும் தொழிலாளர் நலச் சட்ட உரிமைகளும் கிடைக்கச் செய்திட வேண்டுமென்று கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது.

ஆஸ்பத்திரிகள், கிளினிக்கல், கோயில்கள், தர்ம ஸ்தாபனங்கள், க்ஷேத்திரங்கள். பயணிகள் தயகுமிடங்கள் ஆகியவற்றில் வேலை செய்பவர்களுக்கும் இந்தச் சட்டத்தின் அனுகூலங்கள் கிடைக்கப்பெற வேண்டும் என்றும் பரிந்துரை செய்யப்பட்டிருக்கிறது.

---

## நடக்க இருப்பவை

நகராட்சி, ஊராட்சி ஒன்றிய சுகாதார உதவியாளர்கள் மாநில சங்க அமைப்பு கூட்டம்

**18 - 2 - 73-ந் தேதி**

ஞாயிறு காலை 10 மணிக்கு மதுரை திடீர்நகரில் உள்ள (மதுரை மத்திய பஸ்நிலையம் அருகில்)

**மின்சாரத் தொழிலாளர்சங்க**

கட்டிடத்தில் நடைபெறும்

திருவாளர்கள்

ஜெ. எஸ் பரதன்

ஏ. சந்திரன்

ஆர். மாரி(தாசன்)

மற்றும் பலர் கலந்து கொள்வர்

∴ ∴ ∴

போளூரில்

பொதுக்கூட்டம்

18—2—73 மாலை 7 மணிக்கு

**போளூர் பஸ்நிலையம்**

(லெனின் அரங்கில்)

தோழர் என். எஸ். பிள்ளை தலைமையில்

தோழர்கள்

கே. ஆர். சுந்தரம்

கே. கோவிந்தசாமி

ச. ராஜு

கே. புவனேசன்

வி. கோட்டைநாயுடு

மற்றும் பலர் பேசுவர்

∴ ∴ ∴

நாள்: 18—2—73

ஞாயிறு இரவு 9 மணி

இடம்: செங்கோட்டை வண்டிமலச்சிஅம்மன் கோவில் திடல்

பேசுபவர்கள்:

தோழர்கள்

**கே. அனந்தநம்பியார்**

எம். நஞ்சப்பன்

மற்றும் பலர் பேசுவர்.

---

## பெரியகுளம்—உத்தமபாளையம் தாலுகாக்களில்

# தோழர் இ. எம். எஸ்ஸிடம் இரண்டே நாட்களில் ரூ. 22 ஆயிரம்

கம்பம், பிப். 12—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சிக்காகவும், 'தீக்கதிர்' நாளிதழ் வளர்ச்சிக்காகவும், மதுரை மாவட்டத்தில் பெரியகுளம், உத்தமபாளையம் ஆகிய இரு தாலுகாக்களிலும் ரூ. 22 ஆயிரத்துக்கு மேல் வசூலாகியது.

இதற்கான பணமுடிப்புக்களை, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் இ. எம். எஸ். நமபூதிரிபாடிடம் கொடுப்பதற்காக இருதாலுகாக்களிலும கடந்த 10. 11 தேதிகளில் சிறப்பான ஏற்பாடுகளும், நிதியளிப்புக் கூட்டங்களும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

இத்தாலுகாவில் உள்ள கட்சித் தோழர்களும் அனுதாபிகளும ஆதரவாளர்களும் கடந்த 1 மாத காலமாக தீவிரமாக—தேனீக்கள் போன்று சுறுசுறுப்பாக வசூல் இயக்கத்தில் ஈடுபட்டு, இந்த ரூ. 22 ஆயிரம் வசூல் செய்தனர்.

### முதல் நாள்

சுற்றுப்பயணத்தின்முதல் நாளான பிப். 10-ந் தேதியன்று மாலை 4 மணிக்கு தோழர் இ. எம். எஸ். கண்டமனூரை அடைந்தார். பின்னர் ஆண்டிபட்டி, ஜெயமங்கலம், பெரியகுளம் நகரம், எல். புதுப்பட்டி, தேனி மாநகரம், போடி மாநகரம் ஆகிய ஊர்களில் நடந்த நிதியளிப்புக் கூட்டங்களில் அளித்த பண முடிப்புகளைப் பெற்றுக்கொண்டார்.

தேனியிலும், போடியிலும் நல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்ட பொதுக் கூட்டங்களில் தோழர்கள் ஏ, பாலசுப்ர மண்யமும். இ, எம். எஸ், ஸும் பேசினர்கள்,

### 2-ம் நாள் சுற்றுப்பயணம்

தோழர் இ. எம். எஸ்ஸின் இரண்டாம் நாள் சுற்றுப் பயணம் பிப், 11-ந் தேதி 4 மணிக்குத் துவங்கியது.

முதன் முதலாக சுற்றுப் பயணம் கோம்பையில் துவங்கியது, சின்னமனூர், உத்தமபாளையம். புதுப்பட்டி, லோயர் கேம்ப், கூடலூர் வழியாக கம்பம் மாநகரத்தில் முடிந்தது.

ஒவ்வொரு ஊரிலும் தோழர் இ. எம். எஸ்ஸிடம் நிதிக்கான பண முடிப்புகள் அளிக்கப்பட்டன.

கூடலூரிலும், கம்பத்தியும் ஆயிரக்கணக்கானமக்கள் கலந்து கொண்ட பொதுக்கூட்டங்களில் தோழர் இ. எம். எஸ், ஸும் ஏ. பாலசுப்ரமண்யமும் பேசினர்கள்.

தோழர் இ. எம். எஸ். விஜயம் செய்த ஒவ்வொரு ஊரிலும் ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டு சிறப்பான ஆர்வமிக்க வரவேற்புகள் அளித்தனர். அவர் ஆற்றிய உரையை அமைதியாகவும, அக்கறையுடனும் கேட்டனர்.

---

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் 13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா,